# CATALOGUE.

## 1959-60.

1

# கிரய ஜாப்தா.



Printers, Lithographers,
Publishers, Book-Sellers, Book-
Binders, Halftone & Line Block Makers,
Rubber Stamp Makers, Commission Agents Etc.

நமது கம்பெனியில் இரும்பச்சு, கல்லச்சு வேலைகளும், பல புஸ்தகங்களை ஆக்கி விற்றல், வாங்கி விற்றல், பைண்டு செய்தல், போட்டோ எங்கிரேவிங் வேலை செய்தல், றப்பர் ஸ்டாம்பு செய்தல் முதலிய பல தொழில்களும் நடைபெறுகின்றன.

*Head Office :—*

**Hajee M. A. SHAHUL HAMEED & SONS,**
Shahul Hameedia Press,
**Hameedia Buildings:—No. 20, High Road,**
TRIPLICANE, MADRAS 5.

*Branch Office:—*

**HAJEE M. A. SHAHUL HAMEED & SONS,**
No. 194, KEYZER STREET, PETTAH, COLOMBO, 11.

# அறிவிப்பு.

இந்த கேட்லாக்கில் உள்ளவைகள் [illegible] ஸ்டாக் இரு[illegible]
வரை எங்களது மதருஸ் ஹெட் ஆபீஸிலும், கொளும்பு பிராஞ்சு [illegible]
ஸிலும் ரொக்கமாகவும் வி. பி. மூலமும் பெற்றுக் கொள்ளலாம். ஆ[illegible]
இதில் குறிக்கப்பட்ட விலைகள் மதருஸ் ஹெட் ஆபீஸில் கொடுக்கப்படும்
விலைகளாகும். எங்களது கொழும்பு பிராஞ்சில் மதருஸ் விலைகளுக்கு
ரூபாய்க்கு 12½ சதம் அதிகம் கொடுத்து பெற்றுக் கொள்ளலாம்.

இங்ஙனம்

ஹாஜி எம். எ. ஷாஹுல் ஹமீத் அண்டு ஸன்[illegible]

| | |
|---|---|
| ASL-130 | Britanwiri-i-Al Masabih Li Rakat-i-Tarawih (by) تنویر المصابیح لرکعات التراویح Hazrat Allama Mirwaiz Molana Mohamad Yusuf Shah (Research) |
| 1989 AD | Sultania Printing Press Sgr. - (48) pages. |
| ASL-131 | Wird-i-Afkham ورد افخم Pir Abdul Qadir Asim Mularatti written in 1356 H, 89 pages (Printed copy & original manuscript) |
| ASL-132 1959-60 / 56 pages | catalogue of Islamic Books in (Tamil language) Hajee M.A. Shahul Hameed & Sons Madras-5 |

ஹாஜி M. A. ஷாஹுல் ஹமீது & ஸன்ஸ்

ஷாஹுல் ஹமீதிய்யா பிரஸ்,

நெ. 20, ஹைரோட், திருவல்லிக்கேணி, மதறாஸ் 5.

# கிரய ஜாப்தா.

குர்ஆனின் மொழி பெயர்ப்புகள்:—

வெளிவந்து விட்டது! வெளிவந்து விட்டது!!

## திருக்குர்ஆனின் தமிழ் தப்ஸீர்

تبصير الحميد في تفسير القرآن المجيد

## தப்ஸீறுல் ஹமீத் பீ தப்ஸீரில் குர்ஆனில் மஜீத்.

எல்லாம் வல்ல இறைவன் ஹக் ஸுப்ஹானஹு வதஆலா அடியார்களிடம் கொண் டுள்ள அன்பின் காரணமாக, அவர்களுக்கு நேர்வழி காட்டி சன்மார்க்க சீலர்களாக்கு வதற்காக, தனது நபிமார்களை அனுப்பி அவர்களுக்கு வேதங்களையும் அருளியுள்ளான். அவ்வேதங்களில் நமது நாயகம் (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்ட திருக்குர்ஆனே உலக மக்கள் அனைவருக்கும் பொது வேதமாகவும், இஸ்லாம் மார்க்கத்திற்கு ஆதார மாகவும் இருந்து வருகிறது. ஆகையால், முஸ்லிம்கள் தங்கள் உயிரினும் மிகப் பெரிய அருமையான இஸ்லாம் மதத்திற்கு ஆதாரமாயுள்ள திருக்குர்ஆனின் கட்டளைகளையும் அரிய போதனைகளையும் தெரிந்து கொள்வது மிக மிக அவசியமாகும். ஆனது பற்றி தமிழ் நாட்டு முஸ்லிம்களது நன்மைக்காக திருக்குர்ஆனின் தப்ஸீரை தமிழ் பாஷையில் மிகவும் விளக்கமாகவும், தெளிவாகவும், சங்கை பொருந்திய ஸுன்னத்து வல்ஜமா அத்தின் உலமாக்களாலும் இமாம்களாலும் எழுதப்பட்ட தப்ஸீர்களை ஆதாரமாகக் கொண்டு, மிகப்பிரயாசையோடு யாவரும் ஆமோதித்து புகழத்தக்க விதமாய் விளக்கத் தோடு இத்தப்ஸீரை எழுதி அச்சிட்டு வெளியிட்டிருக்கிறோம்.

இந்த தப்ஸீரில் குர்ஆன் ஆயத்துகளை அரபியில் அழகாக எழுதி போட்டோ பிளாக் செய்யப்பட்டு தனித்தனியாக ஆங்காங்கு அமைத்தும் அதன் கீழ் சரியான தர்ஜு மாவும், தப்ஸீர் என்னும் விரிவுரையும், வியாக்யானமும், ஷஃனு நுஸூல் என்னும் ஒவ் வொரு ஆயத்தும் இறங்கிய காரணங்களும், அதற்கேற்ப ஹதீது, ரிவாயத்து, ஹிக்மத்து, பாயிதா, கிஸ்ஸா, அஜீபா முதலிய அரும் பெரும் ஆதாரங்களும் ஒருங்கே சேர்த்து அமைக்கப் பெற்றிருக்கின்றன.

இத்துடன் திருமறை இறங்கிய காரணங்களும், மார்க்க சம்மந்தப்பட்ட விஷ யங்களை எளிதில் குர்ஆன் ஆயத்துகளைக் கொண்டு அறிந்து கொள்வதற்காக ஒரு விரிவான அட்டவணையும், இன்னும் ஒவ்வொரு ஸூறுக்களின் ஹறபு என்னும் அட்சரங்களின் எண்ணிக்கைகளும், அதைக் கொண்டு பலனடையம் அரிய விஷயங்களும் விரிவாக எழுதி சேர்க்கப்பட்டுள்ளன.

இந்த தப்ஸீர் ஸூறத்து பாத்திஹா—பகறுவி லிருந்து ஸூறத்துன்னிஸா முடிய (ஒரு மன்ஸில்) 5½-ஜுஸ்உ வரை முதல் பாகமாக வெளிவந்துள்ளது. இது ராயல்

8-பேஜ் சைஸில் 99-பாரம், 792-பக்கங்கள் கொண்டது. வெண்மையான உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிட்டு அழகாக பைண்டு செய்யப்பட்டது. இதற்கு சரியான விலை ரூ 20 ஆகும். ஆனல், இஸ்லாமிய சேவையை முன்னிட்டும், யாவரும் சுலபமாய் வாங்கும் பொருட்டும் குறைந்த விலையாக ரூ 10 தான் வைத்திருக்கிறோம். முதல் பதிப்பு செலவாகி இரண்டாம் பதிப்பும் அச்சாகி விட்டது. விலை ரூ. 10

**இரண்டாம் பாகம்:** சூறத்துல் மாயிதா முதல் ஸூறத்துத் தௌபா முடிய (சுமார் 5—ஜுஸூ) இரண்டாம் பாகமாக வெளிவந்திருக்கிறது. 740—பக்கங்கள் கொண்டது, கிளேஸ் காகிதத்தில் அச்சிட்டு கலிகோ பைண்டு செய்யப்பட்டது. விலை ரூ. 10

**மூன்றும் பாகம்:** சூரே யூனுஸ் முதல் ஸூறத்துந் நஹ்ல் முடிய 7—சூறுக்களின் தப்ஸீர் மூன்றும் பாகமாக வெளிவந்திருக்கிறது. 824-பக்கங்கள் கொண்டது, கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டு கலிகோ பைண்டு செய்யப்பட்டது. விலை ரூ. 10

**நான்காம் பாகம்:** ஸூரத்துல் இஸ்ராஉ முதல் ஸூரத்து நூர் முடிய 8 ஸூராக்களின் தப்ஸீர் நான்காம் பாகமாக வெளிவந்திருக்கிறது. 868-பக்கங்கள் கொண்டது, கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டு கலிகோ பைண்டு செய்யப்பட்டது. விலை ரூ. 10.

**ஐந்தாம் பாகம்:** ஸூறத்து புர்க்கான் முதல் ஸூறத்து யாஸீன் முடிய 12-ஸூராக்களின் தப்ஸீர். விலை ரூ. 12

**ஆறும் பாகம்:** ஸூறத்து ஸாப்பாத் முதல் ஸூறத்து ஹுஜ்ராத் முடிய 13-ஸூராக்களின் தப்ஸீர். விலை ரூ. 12

**ஏழாம் பாகம்:—** (கடைசி பாகம்) அச்சாகிறது. விலை ரூ. 12

[எல்லாவற்றிற்கும் தபால் சார்ஜ் (போஸ்டேஜ்) வேறு]

# அன்வாருல் குர்ஆன் என்னும் திருமறை பிரகாசம்

1-வது ஒளி

(குர்ஆன் ஷரீபின் 3—வது பாகமாகிய)

## அம்மயத் ஜுஸூவின் தர்ஜுமா

(இரண்டாம் பதிப்பு)

இந்த புஸ்தகத்தில் அம்மயத் ஜுஸூவில் உள்ள எல்லா ஸூறுக்களும் தர்ஜுமா செய்யப்பட்டு இருக்கின்றன. ஒவ்வொரு ஆயத்தையும் முதலில் அரபியில் போட்டோ பிளாக்கைக் கொண்டு அச்சிடப்பட்டு, அதை யடுத்து அதற்குத் தமிழில் உச்சரிப்பு காயிதாவுடன் போடப்பட்டு, அதனை யடுத்து அந்த ஆயத்தின் பொருளை சுத்தத் தமிழில் போடப்பட்டு இருக்கின்றன. இந்த புத்தகம் அம்மயத் ஜுஸூவிலுள்ள ஒவ்வொரு ஆயத்திற்கும் பொருளை அறிந்து கொள்ள உதவுவதுடன் அரபியே தெரியாதவர்கள் அம்மயத் ஜுஸூவிலுள்ள எந்த ஸூறுவையும் ஓத தெரிந்துகொள்ள உதவும்.

இதன் விலை நயாபை. 80

2—வது ஒளி

## ஸூறத்து யாஸீன் தர்ஜுமா

(முதற் பதிப்பு)

இந்த புஸ்தகத்தில் ஸூறத்து யாஸீனில் உள்ள ஒவ்வொரு ஆயத்தையும் 1-வது ஒளியைப் போலவே தமிழ் உச்சரிப்புடன் தர்ஜுமா செய்யப்பட்டிருக்கின்றது,

இதன் விலை நயா பைஸா. 52

3-வது ஒளி

# ஸூறத்து தபாறக் தர்ஜுமா

(முதற் பதிப்பு)

இதில் தபாரக் ஸூறுவில் உள்ள ஆயத்துகளை ஆயத்து ஆயத்தாக போட்டோ பிளாக்கில் போடப்பட்டு, அவைகளுக்குக் கிழ் அந்த ஆயத்துகளுக்கு உச்சரிப்பும் தர்ஜு மாவும் தமிழில் போடப்பட்டுள்ளது. இதன் விலை நயா பைஸா 28

ஷெ மூன்று ஒளிகளும் சேர்ந்தது கலிகோ பைண்டு ரூ. 1 - 60

---

## பள்ளிக்கூட புஸ்தகங்கள்

# அறபு த:லீமுல் புர்கான் பீ எஸ்ஸர்னல் குர்ஆன்

இது சிறு குழந்தைகள் அரபி ஓத சுலபமாய் கற்றுக்கொள்ள, புதிய முறையில் எழுதி யுள்ள அரபி காயிதா. இதில் ஒவ்வொரு பாடத்திற்கு முன்பும் அந்த பாடத்தைக் குழந்தைகளுக்கு எவ்வாறு கற்றுக்கொடுக்க வேண்டுமென்ற ஒஸ்தாத்மார்களுக்கு குறிப்பும் அறபுத் தமிழில் போடப்பட்டுள்ளது. இதை அழகாக பெரிய எழுத்தில் எழுதி போட்டோ பிளாக் செய்து கிளேஸ் காகிதத்தில் அச்சிடப் பட்டிருக்கிறது இரண்டு பாகங்களும் சேர்ந்தது. விலை நயா பைஸா. 40

எஸ்ஸர்னல் குர்ஆன் லாகூர் ஸ்டைல் பெரியது விலை நயா பைஸா. 64

மேற்படி சிறியது விலை நயா பைஸா. 40

# உர்து ஸலீஸ் காயிதா

இது உர்து கற்றுக் கொள்வதற்கு சுலபமான பாலர் பாடம். இதில் படங்களைக் கொண்டு இலகுவாய் குழந்தைகள் உர்து வார்த்தைகளைக் கற்றுக்கொள்ள புதிய முறையில் போடப்பட்டுள்ளது. இரண்டு கலர்களில் அச்சிடப்பட்டது. விலை நயா பைஸா. 32

# தமிழ் அறபுத் தமிழ் முதற் பாடம்

இந்த ரிஸாலாவாகிறது தமிழ் தெரிந்தவர்கள் அரபுத் தமிழ் கற்றுக் கொள்வதற்கும் அரபுத் தமிழ் தெரிந்தவர்கள் தமிழ் கற்றுக் கொள்வதற்கும் அவசியமானது. அறபுத் தமிழ் அட்சரங்களையும் தமிழ் அட்சரங்களையும் ஒன்றேடொன்று இணைத்துக் காட்டி எழுதப்பட்டிருக்கிறது. விலை நயா பை. 56

# தீனுல் இஸ்லாம்

### ஷாபி மதுஹபுக்குரியது

இதில் இஸ்லாம் மார்க்கம், ஒன்றும் கலிமா, கலிமா ஷஹாதத்து, தொழுகையில் ஓத வேண்டிய ஓதல்கள், தக்பீர், தக்பீர் கட்டியபின் ஓதும் துஆ, ஸூறத்து பாத்திஹா, ஸூறத்து இக்லாஸ், ருகூவுடைய தஸ்பீஹ், தஸ்மீஃ, தஹ்மீது, ஸுஜூதுடைய தஸ்பீஹ், நடு இருப்பில் ஓதும் துஆ, முந்தின அத்தஹிய்யாத்து, பிந்தின அத்தஹிய்யாத்து, ஸலாம் சொல்லல், ஸுப்ஹ் தொழுகையில் ஓதும் குனூத், தொழுகைகளுடைய வக்துகளும், அதில் தொழ வேண்டிய தொழுகைகளும், ஒலு செய்யும் ஒழுங்குகள், ஒலு செய்தபின் ஓதும் துஆ, பாங்குடைய கலிமாக்கள், ஸப்ஹுடைய பாங்கு, பாங்கு இகாமத்தை கேட் பவர்கள் பிரதி மொழி, இகாமத்து, பாங்கு இகாமத்துடைய துஆ, ஐந்து வக்துகளின்

பர்ளு, ஸுன்னத்து, தொழுகையின் தக்பீர்கள், ஜும்ஆ, பர்ளு, ஸுன்னத்து தொழுகையின் தக்பீர்கள், நோன்பு பெருநாள் தொழுகை தக்பீற், ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகை தக்பீர், தருவீஹ் தொழுகை தக்பீற், தொழவேண்டிய ஒழுங்குகள், தொழுது முடிந்தபின் ஓதும் இஸ்திக்பாரும் அவ்ராதும் துஆவும், தொழுது முடிந்தபின் ஓதும் துஆ, தொழுகை நிறைவேறுகிறதற்கு வேண்டுமான ஷர்த்துகள், தொழுகையில் பேண வேண்டிய அம்சங்கள் ஆகிய இவைகள் சேர்ந்திருக்கின்றன.

இந்த புஸ்தகத்தில் அரபு வாக்கியங்களை முதலில் அரபு எழுத்துக்களிலும் பின்பு அவைகளை தமிழிலும் போடப்பட்டு இருக்கின்றன. ஒவ்வொரு முஸ்லிமானவர்களுக்கு இது அவசியமான புஸ்தகம். விலை நயா பைஸா. 40

# முஹம்மதிய தமிழ் வாசக புஸ்தகங்கள்

நாளது வரையில் அரசாங்கத்தாரால் அங்கிகரிக்கப் பெற்றும் பெருந்துமுள்ள நம் முஹம்மதிய பாடசாலைகள் தமிழ் நாட்டிலே பல இருக்கின்றன. அவைகளில் தமிழ் பயில விருப்பமுடைய நம் முஸ்லிமான சிறுவர்கள் தங்களுக்கேற்ற இஸ்லாமிய வாசக பாடங்கள் இல்லாததைக் கருதி தமிழின்மீது வைத்துள்ள ஆர்வத்தைக் குறைத்து விடுகிறார்கள்.

இதுபரியந்தம் வெளிவந்துள்ள தமிழ் வாசக பாடங்களில் ஒன்றிலேனும் இஸ்லாம் மத வழக்க ஒழுக்கங்களும், நம் முன்னோர்களான நாதாக்களுடைய வரலாறு, தேச வரலாறு முதலியனவும் எழுதப்பட்டில்லை. இதுபற்றி நம் முஹம்மதிய பள்ளிக்கூடத் தலைவர்களில் சிலர் நம் முஸ்லிமான தமிழ் பயிலும் சிறுவர்கள் நமது மார்க்க முறை ஒழுங்குகளைச் செவ்வையாய் அறிந்து கொள்ளுமாறு, தமிழில் வாசக புஸ்தகம் எழுதும்படி என்னைப் பன்முறை கேட்டுக் கொண்டமையால், நமது முஸ்லிமான சிறுவர்களுக் கேற்றவாறே இஸ்லாமிய மார்க்க ஒழுக்கங்கள் யாவையும் சேர்த்து பாலர் பாடம், 1-வது, 2-வது, 3-வது 4-வது வாசகம் வரை ஐந்து பாட புஸ்தகங்கள் தயாராகி அச்சிட்டு இராஜாங்கத்தாராலும் அங்கிகரிக்கப் பெற்று பல ஊர்களில் கவர்ன்மென்ட் முஹம்மதிய ஸ்கூல்களிலும், மதரஸாக்களிலும், பல தெருப் பள்ளிக்கூடங்களிலும் பாடம் போதித்து வருகிறார்கள். அதுவுமன்றி இது பரியந்தம் இல்லாமல் நம் முஸ்லிம் சிறுவர்களுக் கென்று இப்போது அருமையாய் வெளிவந்த இந்த வாசகப் பாடங்களை கல்வியிற் சிறந்த அநேக உலமாக்களும் பார்த்து அங்கிகரித்து நமக்கு நற்சாக்ஷி பத்திரங்களும் அளித்திருப்பதோடு எல்லா பள்ளிக்கூடங்களிலும் பாடம் வைக்க முயன்று வருகிறார்கள். இன்னும் உலமாக்களுடைய தூண்டுதலின் பேரில் அநேக கனவான்கள் இதை நூற்றுக் கணக்காய் கிரயம் கொடுத்து வாங்கி பள்ளிக் கூடங்களுக்கும் முஹம்மதிய சிறுவர்களுக்கும் ஹதியாவாக பரிசளித்தும் வருகிறார்கள்.

இன்னும் சில முஹம்மதிய பள்ளிக்கூடங்களில் பழைய தமிழ் வாசக பாடங்களையே கற்பிக்கிறார்கள். இது இந்த முஹம்மதிய வாசகங்களைப் பார்க்காத குறைவோ அல்லது காரியக்கர்த்தரான முஹம்மதிய தலைவர்கள் தூண்டாத குறைவோ நாங்கள் அறியோம். ஆனால் எந்த முஸ்லிம் நண்பர்களும் முஹம்மதிய இந்த வாசகங்களைப் பார்த்தால் இதைப் பள்ளிக்கூடங்களில் பாடம் வைக்க முயலாமல் இருக்க மாட்டார்களென்று உறுதியாகச் சொல்லலாம்.

### இதன் கிரயம்

| | ரூ. நபை |
|---|---|
| முஹம்மதிய பாலர் பாடம் ... ... ... | 0 – 28 |
| முஹம்மதிய 1-வது வாசகம் ... ... ... | 0 – 28 |
| முஹம்மதிய 2-வது வாசகம் ... ... ... | 0 – 52 |
| முஹம்மதிய 3-வது வாசகம் ... ... ... | 0 – 76 |
| முஹம்மதிய 4-வது வாசகம் ... ... ... | 1 – 28 |

தீனுல் இஸ்லாம் ஷாபியி 1,வது
(அரபியும் தமிழும் சேர்ந்தது) ... ... ... 0 – 40

---

## நபிமார்களுடைய சரித்திரங்கள்:—

# கஸஸுல் அன்பியா

### இதில் நபிமார்களுடைய சரித்திரங்கள் அடங்கியது

இதில் முதலாவது அல்லாஹு தஆலா ஆதியாய் படைத்த படைப்புகளைப் பற்றியும், 1-வது பாவா ஆதம் அலைஹிஸ்ஸலாம், 2-வது ஷீது அலைஹிஸ்ஸலாம், 3-வது இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம், 4-வது ஹாரூத் மாரூத்தென்னும் இரண்டு மலக்குகள், 5-வது நூஹ் அலைஹிஸ்ஸலாம், 6-வது ஹூது அலைஹிஸ்ஸலாம், 7-வது ஷத்தாது கட்டின இரமதாத்துல் இமாதென்கிற சுவர்க்கம், 8-வது ஸாலிஹ் அலைஹிஸ்ஸலாம், 9-வது இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம், 10-வது இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம், 11-வது இஸ்ஹாக் அலைஹிஸ்ஸலாம், 12-வது யஃகூபு அலைஹிஸ்ஸலாம், 13-வது யூஸுப் அலைஹிஸ்ஸலாம், 14-வது ஐயூபு அலைஹிஸ்ஸலாம், 15-வது ஸில்கிப்லி அலைஹிஸ்ஸலாம், 16-வது ஷுஐபு அலைஹிஸ்ஸலாம் 17-வது மூஸா அலைஹிஸ்ஸலாம், 18-வது கிலுறு அலைஹிஸ்ஸலாம், 19-வது இல்யாஸ் அலைஹிஸ்ஸலாம், 20-வது அல் யஸஉ அலைஹிஸ்ஸலாம், 21-வது அஷ்மவீல் அலைஹிஸ்ஸலாம், 22-வது தாவூத் அலைஹிஸ்ஸலாம், 23-வது ஸுலைமான் அலைஹிஸ்ஸலாம், 24-வது யூனுஸ் அலைஹிஸ்ஸலாம், 25-வது ஈஸா அலைஹிஸ்ஸலாம், 26-வது ஜக்கரியா அலைஹிஸ்ஸலாம், 27-வது யஹ்யா அலைஹிஸ்ஸலாம், 28-வது பீவி மரியம் அலைஹிஸ்ஸலாம் ஆக இவ்வளவு நபிமார்களுடைய கிஸ்ஸாக்களடங்கி யிருக்கின்றன. இந்த கிஸ்ஸாக்கள் யாவும் குர்ஆனில் பிரஸ்தாபிக்கப் பட்டவைகளாகும். இதை ஒவ்வொரு முஸ்லிமும் வாங்கிப் படிக்க வேண்டியது அவசியம்.

கலிகோ பைண்டு விலை ரூ. 9 – 60

ஷை அறபுத் தமிழ் ரவ்லதுல் அஸ்பியா-பீ-கஸஸுல் அன்பியா முதற் பாகம் றப்பு கலிகோ பைண்டு விலை ரூ. 6 – 00

மேற்படி இரண்டாம் பாகம் விலை ரூ. 7 – 00

ஷை 3-ம் பாகம் விலை ரூ. 5 – 00

புதிய இரண்டாம் பதிப்பு வெளிவந்து விட்டது.

# நபி நாயகத்தின் ஜீவிய சரித்திரம்

(சிறுவசனம்)

இந்த புஸ்தகத்தில் முதலில் அரேபியாவும் அதன் பூர்வீக நிலைமையும், கஃபா ஷரீபின் ஸ்தாபனம், விக்கிரக ஆராதனை, நபி நாயகம் (ஸல்) அவர்களின் பாட்டன்மார்களின் விசேஷ வரலாறுகள், அப்துல் முத்தலிப் சொர்ப்பனங் கண்டு ஜம் ஜம் கிணற்றை தோண்டினது, அப்துல்லாவைக் குறுபான் செய்தது, அப்துல் முத்தலிப் அவர்களின் சொர்ப்பனம், நபிநாயகம் (ஸல்) அவர்களின் தலைமுறைத்தோற்றம், அப்துல்லாவுக்கும் ஆமினாவுக்கும் திருமணம் ஆகிய இந்த ஒவ்வொரு தலைப்புக்கும் கீழ் ஒவ்வொரு பெரிய அத்தியாயமாக எழுதியிருக்கிறது.

பிறகு நபிநாயகத்தின் வாலாற்றை மூன்று பெரிய காண்டங்களாக பிரித்துக் கூறப்பட்டிருக்கிறது. அவை: (1) விலாதத்துக் காண்டம், (2) நுபுவ்வத்துக் காண்டம், (3) ஹிஜ்ரத்துக் காண்டம்.

## 1. விலாதத்துக் காண்டம்

இந்த காண்டத்தில் கூறப்பட்ட விஷயங்கள்:—திரு நபியின் அவதாரம், கஃபத்துல்லாவை இடிக்க வந்த அப்றஹாவும் அவன் சேனையும், முஹம்மது நபி (ஸல்) அவர்கள் பிறந்த காரணம், ஹலிமா பால் ஊட்டியது, இலாஞ்சனை தரித்தது, புனல் விளையாட்டு, புகைரூவை கண்டது, பாதை போந்தது, சூரத்திற் புனலழைத்தது, பாந்தள் வதையுண்டது, நதி கடந்தது, புலி வசனித்தது, பாந்தள் வசனித்தது, இசுரூ கண்டது, கள்வரை நதி மறித்தது, ஷாம் நகர் புக்கது, கரம் பொருந்தினது, ஊசாவைக் கண்டது, கதீஜா கனவு கண்டது, மணம் பொருந்தினது, மணம் புரிந்தது.

## 2. நுபுவ்வத்துக் காண்டம்

இந்த காண்டத்தில் கூறப்பட்ட விஷயங்கள்:—நபி பட்டம் பெற்றது, தொழுகை வந்து வரலாறு, தீனிலைக்கண்டதும், உமறுகத்தாபு ஈமான் கொண்டது, உடும்பு பேசியது, உத்பா வந்தது, ஒட்டகங்கள் பேசினவை, ஹபீபு அரசர் மக்கத்துக்கு வந்தது, மதியையழைப்பித்தது, தசைக் கட்டியை பெண்ணுருவம் அமைத்தது, ஹபீபு ராஜா வரிசைவர விடுத்தது, ஈமான் கொண்டவர்கள் ஹபஷா இராஜ்ஜியத்திற்குப் போந்தது, மானுக்குப் பிணை நின்றது, ஈத்தங்குலை வரவழைத்தது, ஒப்பெழுதித் தீர்ந்தது, புத்து பேசியது, அபூத்தாலிபும் பிராட்டியாரும் பொன்னுலகு புக்கது, பருப்பத ராஜாவைக் கண்ணுற்றது, அத்தா ஈமான் கொண்டது, ஜின்கள் ஈமான் கொண்டது, ஆயிஷா நாயகியின் திருமணம், காம்மா வந்தது, விருந்தூட்டியது, நபிநாயகம் (ஸல்) மிஃறாஜுக்குப் போந்தது.

## 3. ஹிஜுறத்துக் காண்டம்

இந்தக் காண்டத்தில் கூறப்பட்ட விஷயங்கள்:—மதீனத்தார் ஈமான் கொண்டது, மதீனத்தார் வாய்மை கொடுத்தது, யாத்திரை விடமீட்டியது, சுறாகத்துத் தொடர்ந்தது, உம்மு மகுபதுவைக் கண்டது, மதீனமாநகரம் புக்கது, கபுஹாபு வந்தது, விருந்திட்டு ஈமான் கொள்வித்தது, உகுபான் ஈமான் கொண்டது, சல்மான் பாரிசி வந்தது, கஃபத்துல்லாவை நோக்கித் தொழுதது, ஓநாய் பேசியது, வத்தான் படையெழுச்சி, பாத்திமா நாயகியின் திருமணம், சிபுல்பகுறுப் படை யெழுச்சி, புவாத்துப்படை யெழுச்சி, அசீறுப் படையெழுச்சி, பத்துனுன் னகுலாவின் சண்டை, பதுறு யுத்தம், சவீக்குப் படை யெழுச்சி, குதிரிப் படை யெழுச்சி, தீயம்றுப் படையெழுச்சி, அபிறுபிகு வதை யுண்டது, ஹஸனார் பிறந்தது, அபூதல்ஹா விருந்து கொடுத்தது, உஹது யுத்தம், அமறுப் படை யெழுச்சி, கருபு வதை யுண்டது, சுகுறுப் படை யெழுச்சி, பதுறு சுகுறுப் படை யெழுச்சி, இமாம் ஹுஸைன் (றலி) பிறந்தது, தாத்துற்ற ஹாக்கு படை யெழுச்சி, காபிர் கடன் தீர்ந்தது, முறைசீக்குப் போர், கந்தக்கு அழைத்தது, உபை படை யெடுத்து வந்தது, பனீ குறைலாக்கள் கொலை யுண்டது, ஸுமாம் ஈமான் கொண்டது, ஸெய்னபு நாச்சியாரின் கலியாணம், ஒட்டகம் பேசியது, மழை வரவழைப்பித்தது, அந்தகன் வந்தது, ஹவுலாவைக் கூட்டியது, உமுறுவுக்குச் சென்றது, சல்மா பொருந்தியது, உசனிக் கூட்டத்தார் தண்டனை பெற்றது, அபாசுபியானுடன் குதிரை பேசினது, கைபறு பிடிப்பட்டது, ஜம்றத்து விருந்திட்டது, வேட்டையாடினது, உமறு கலாச் செய்யச் சென்றது, மக்கமா நகரம் பிடிப்பட்டது, அப்பாசிபுனு மிறுத்தாசு ஈமான் கொண்டது, குனையின் நகரம் பிடிப்பட்டது, தாயிபு நகரம் பிடிப்பட்டது, நபிநாயகம் ஹஜ்ஜு செய்தது, நாயகத்தின் வபாத்து, நபி பெருமானா ரவர்களின் நம்பிராட்டிகள், பெருமானா ரவர்களின் குணலக்ஷணங்கள், பெருமானா ரவர்களின் திவ்விய ஒழுக்கங்கள், பெருமானா ரவர்களின் முஃஜிஸாக்கள் (அற்புதங்கள்)

மேற் கூறிய யாவற்றையும் 8½ அங்குலம் நீளம் 5½ அங்குலம் அகலமுள்ள புஸ்தகத்தில் 1008 பக்கங்களில் அச்சிட்டு சேர்த்தியான கலிகோபைண்டு செய்திருக்கிறது.

இதன் விலை ரூ. 8

மேற்படி அறபுத் தமிழ் அஷ்ஷஜறாத்துல் மூஹம்மதியா (ரஸூலுல்லாஹ்வின் சரிதை)

**இதன் விலை ரூ. 8**

# மஜ்மூஉ முஃஜிஸாத்துர் றஸூல்

இந்த புஸ்தகமாகிறது நமது நபிகள் நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய அற்புதங்களாகிய 1011 முஃஜிஸாக்களை ஒழுங்கு திரட்டி "மஜ்மூஉ முஃஜிஸாத்துர் றஸூல்" என்னும் நாமமிட்டு 3 வால்யமாக அச்சிடப்பட்டிருக்கிறது. இதர நபிமார்களுடைய அற்புதங்களை விட நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய முஃஜிஸாத்தென்னும் அற்புதமாகிறது மிகவும் அருமையானது. இதில் 1-வது வால்யம் 395 முஃஜிஸாத்துக்கள் அடங்கியன.

கிளேஸ் கலிகோ பைண்டு விலை ரூ. 3 – 00

# ஸுல்தான் சிக்கந்தர் (அலை) கிஸ்ஸா

ஸுல்தான் சிக்கந்தர் ஸுல்கர்னைன் (அலை) அவர்கள் ஒரு நபியாக இருந்து உலகத்துக்கும், உலக மக்களுக்கும் பல நல்ல காரியங்கள் செய்திருக்கிறார்கள். ஸுல்தான் சிக்கந்தர் ஸுல்கர்னைன் உடைய அரசாட்சி உலகத்தில் சிறந்த அரசாக்ஷியாக இருந்தது. "ஜுல்கர்னைன்" என்றால் இரண்டு கொம்புகளை யுடையவர் என்று அர்த்தம். இதன் விபரமெல்லாம் இந்த நூலில் விரிவாய் சொல்லப்பட்டிருக்கிறது.

இத்துடன் நம்றூது மன்னருடைய கிஸ்ஸாவும், நபி லூத் அலைஹிஸ்ஸலாமுடைய கிஸ்ஸாவும் சேர்த்து எழுதப்பட்டிருக்கிறது. எல்லோரும் படித்து அறிய வேண்டிய பிரயோஜனமான புஸ்தகம் இது. சுத்தத் தமிழ் விலை ந பை. 52

---

## போர் செய்திகள்:—

# ஐரோப்பா மகா யுத்த சரித்திரம்

முதல் உலக மகா யுத்தத்தைப் பற்றிய விஷயம் அநேகமாய் அவ்வப்போது பேப்பர் மூலமாய் சிலர் பார்த்திருக்கலாம். நமது நாட்டார் பொதுவாய் அறிந்து கொள்ள வேண்டிய அவசியமான அநேக விஷயங்கள் இதில் அடங்கி யிருக்கின்றன. யுத்தம் முடிந்ததும் மறக்கப்பட்டு போனபின்பும் அத்தகைய விஷயங்களை நமது சந்ததியாரும் வாசித்தறிந்து கொள்ளக் கூடியவைகளும், இவ்வுலகத்திலுள்ள ஒவ்வொரு அரசர்களின் அந்தஸ்தும், அவர்களுடைய வல்லமைகளும் சேனபலமும் போர் கப்பல் முதலிய யுத்தக் கருவிகளின் விபரங்களும், யுத்தத்தில் சம்மந்தப்பட்ட தேசங்களின் அமைப்பும், யுத்தத்திற்குக் காரணமாய் நடந்த சில அந்தரங்க விஷயங்களும், இந்நூலில் விபரமாய் கூறப்பட்டிருக்கின்றன. சில அரசர்களுடைய படங்களும் ஆப்டோன் பிளாக்கில் அச்சிட்டு சேர்க்கப்பட்டிருக்கின்றன. இது ஒவ்வொரு குடும்பத்திலும் ஒரு புஸ்தகம் இருக்க வேண்டியது அவசியமேயாகும்.

இப்புத்தகம் மிக்க பிரயாசையோடு சரியான அத்தாட்சியைக் கொண்டு பெயர் பெற்ற மகா வித்துவானாகிய பண்டிதர், கனம் ஆரணி குப்புசாமி முதலியார் அவர்களைக் கொண்டு எழுதப்பட்டது. இதை ரூபாய். 1 – 25 கிரையமாக விற்று வந்தோம். இப்போது விலை மிகவும் குறைக்கப்பட்டதாலும் சில காபிகளே கைவசம் இருப்பதாலும் முந்துபவர்களுக்கே கிடைக்கும். இதன் விலை ந பை. 80

# சைதத்துப் படைப்போர் வசன காவியம்

இது ஹஜ்ரத் அமீறுல் மூஃமினீன் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் குமாரர் அப்துல் றஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் அமீர் சுபியான் என்னும் ஒரு அரசனோடு வெகு சாமார்த்தியத்துடன் யுத்தஞ் செய்து அவனுடைய

மகளாகிய செய்தத்துவை கலியாணஞ் செய்து மதீனத்திற்கு வந்தது முதலிய விஷயங்கள் நிரம்பியுள்ள ஒரு அற்புதமான கிரந்தமாகும். இதை வாசிக்கவும் கேட்கவும் வெகு இன்பகரமா இருக்கும். இதைப் பற்றி நிரம்பச் சொல்ல வேண்டியதில்லை. இதானது மலையாளம் குஞ்சி மூசாப் புலவர் அவர்களால் செய்துள்ள செய்யிதத்துப் படைப்போர் என்னும் காவியத்தையே வசன ரூபமாகச் செய்யப்பட்டது. வசனம் விலை நயா பை. 80

ஷை பாடல் விலை நயா பை. 80

# டர்க்கி பால்கன் யுத்த சரித்திரம்

இதில் ஐரோப்பா கண்டத்திலுள்ள புராதன இராஜ்ஜியமாகிய டர்க்கிக்கும், பால்கன், ஸர்வியா, மாண்டி நீக்ரோ, யூனன் (கிரீக்) முதலிய இராஜ்ஜியங்களுக்கும், உலக முதலாவது யுத்தத்திற்கு முன்பு, நடந்து வந்த அற்புதமாகிய சண்டைகளைப் பற்றி மிக விரிவாக எழுதப்பட்டிருக்கிறது.

விலை ரூ. 2

அலி றலியல்லாஹு அன்ஹு அவர்களின் மகனர்

# முஹம்மது ஹனீபா யுத்த சரித்திரம்

இதில் ஹஸ்ரத் முஹம்மது ஹனீபா அவர்களின் தாயாராகிய ஹனீபா பீவியுடன் அலி றலியல்லாஹு அன்ஹு அவர்கள் யுத்தஞ் செய்து ஜெயித்து, அவர்களை நிக்காஹ் செய்து விட்டுப் போனதும், பிறகு ஹஸ்ரத் முஹம்மது ஹனீபா பிறந்து தாயிடம் வளர்ந்து தமது பிதாவாகிய அலி றலியல்லாஹு அன்ஹுவைத் தேடிச் சென்று பிதா வென்று அறியாமல் யுத்தம் புரிந்ததும் பிறகு ஹஜ்ரத் முஹம்மது ஹனீபா அவர்கள் பூதகேவுகளுடன் யுத்தம் புரிந்து பீவி ஸைனுல் அறபை விவாகம் செய்ததும், ஹஸ்ரத் இமாம் ஹுஸைன் றலியல்லாஹு அன்ஹு அவர்களை எஸிது என்பவன் ஷஹீது செய்து, ஹஸரத் இமாம் ஸைனுல் ஆபிதீன் அவர்களையும் ஹஸ்ரத் நபி நாயகம் அவர்களின் வீட்டாரையும் சிறையிட்ட விஷயமாகத் தாங்கள் புறப்பட்டு போகும் போது உமர் அலி, தாலிப் அலி, ஆகில் அலி, முஸிப்காகான், இப்ருஹீம் உஷர்த்து, தோஹான் மோஹான் முதலிய பிரக்யாதி பெற்ற வீரர்களோடு மதீனமா நகரஞ் சென்று உத்பா வலீது என்பவர்களுடனும், மர்வானுடனும் எஸீதுடனும் பல ஊர்களில் பலவிதமாய் மகா வீரியத்துடன் அதிசயிக்கத்தக்க விதமாய் யுத்தஞ் செய்து எஸீதுடைய படைகளை முறிய அடித்தும் ஜெயித்தும், மர்வானுடைய மூக்கையும் காதையும் அறுத்தும் ஹுஸைன் றலியல்லாஹு அன்ஹுடைய பழிக்கு பதில் பழி வாங்கி சிறையை மீட்டியதும், ஹஸரத் ஸைனுல் ஆபிதீன் அவர்களைப் பட்டத்தில் உட்கார வைத்ததும், எல்லா அரசாங்கத்தையும் தங்களுக்குள்ளடக்கி ஆண்டதுமான எல்லா விஷயங்களும் மிக அருமையாயும் தெளிவாயும், எழுதப்பட்டிருக்கிறது.

(அச்சாகிறது)

புதிய பதிப்பு கலிகோ பைண்டு விலை ரூ. 3

# ராஸூல் கவுல் படைப்போர்

இந்த சரித்திரமானது நமது நாயகம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தங்கள் காலத்தில் தீனுல் இஸ்லா மென்னும் சன்மார்க்கத்திற்கு விரோத மான செய்கையுடைய ராஸூல் கவுல் என்னும் அரசனேடு யுத்தம் புரிந்து ஜெயம் கொண்ட வரலாருகும். இது மிக ருசிகரமும் அற்புதமுமானது. இது காயற் பட்டணம் கண்அஹ்மது மக்தூம் பிள்ளை அவர்கள் குமாரர் மக்தூம் முஹம்மது புலவர் அவர்களா லியற்றப்பட்டது.

(அடுத்தப் பதிப்பு அச்சாகிறது) விலை ரூ. 3 – 60

அறபுத் தமிழ் 2-வது பாகம் விலை ரூ. 2 – 00

# ஸீரத்துல் பாறூக்

இதாகிறது நமது நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய இரண்டாவது கலிபாவாகிய உமர் இப்னுல் கத்தாபு றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய சரித்திரம்.

இதில் அவர்களுடைய பிரபல்யங்களும், கீர்த்திகளும், வீரியங்களும், யுத்த சாமார்த்தியங்களும், தீனில் வழுவாது நடக்கும் நீதிகளும் அடங்கி யிருக்கின்றன. எல்லா முஸ்லிம்களுக்கும் அவர்களுடைய மகிமை புலப்பட்டிருப்பதால் நாமதை இங்கு விரித்தெழுதவில்லை. இச்சரித்திரம் வாசிக்க வாசிக்க ஆனந்தத்தையும் ஆச்சரியத்தையும் உண்டாக்கு மென்பதில் ஐயமில்லை. இது இரண்டு பாகமாகும். முதல் பாகத்தில் அவர்களுடைய சரித்திரங்களும், இரண்டாம் பாகத்தில் அவர்களுடைய நீதிகளும் அடங்கி யிருக்கின்றன. இரண்டு பாகமும் சேர்ந்தது விலை ரூ. 3

---

**மார்க்க ஒழுக்கங்கள்:—**

புதிய நூல்! அரிய நூல்!!

# அஸ்ஸலாத் என்னும் தொழுகை

இக்காலை நம் பாமர முஸ்லிம் சகோதரர்களில் பலர், அரபு (உர்து) ஓதத் தெரியாத காரணத்தினல் கலிமா, ஈமான், இஸ்லாம், தொழுகை முதலிய முக்கிய விஷயங் கூட தெரியாமல் இருக்கின்றனர். அநேகர், தொழுகையில் நின்று என்ன செய்வது என்ன ஓதுவது என்று தெரியாமல் திகைக்கின்றனர்.

அப்படிப் பட்டவர்களின் நன்மைக்காகவே, இந்நூல் சுத்தத் தமிழில் எளிய நடையில் புரியும் வண்ணம், ஜனப் மவ்லவி, டி. எப். ஆர். மஆலி ஸாஹிப் (பாகவி) அவர்களால் இயற்றப்பட்டு, ஆங்காங்கு அரபு பிளாக்குகளும், தொழுகைப் படங்களும் சேர்க்கப்பட்டு வெளியிடப் பட்டிருக்கிறது.

இந்நூல் கைவசம் இருந்தால் ஈமான் இஸ்லாம் முதலிய விபரங்களைத் தெரிந்து கொள்வதோடு, சுயமே தொழுதுக் கொள்ளும் விபரத்தையும் தெரிந்து கொள்ளலாம்.

தொழுகையில் ஓதும் நிய்யத்துகள், ஸூராக்கள், துஆக்கள், ஓதல்கள் யாவும் அரபியில் போட்டு அதன்கீழ் உச்சரிப்பும் கருத்தும் போடப்பட் டிருக்கின்றன.

இன்னும், இந்நூலில் ஒலுவு, குஸ்லு, தயம்மும், ஜனஸா தொழுகை, ஜும்ஆ தொழுகை, ஈது தொழுகை, ஜக்காத், நோன்பு, ஹஜ்ஜு முதலிய விபரங்களும் இருக்கின்றன.

கடைசியில் ஸூராக்களும் தொழுகை நேர அட்டவணையும் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஷாபி கிதாபு வேறு, ஹனபி கிதாபு வேறு.

ஷாபி கிதாபு கிளேஸ் காகிதம் ஹதியா நயா பைசா. 80
ஷை றப் காகிதம் ஹதியா நயா பைசா. 60
ஹனபி கிதாபு கிளேஸ் காகிதம் ஹதியா நயா பைசா. 80
ஷை றப்காகிதம் ஹதியா நயா பைசா. 60

# அஹ்காமுல் முஸ்லிமீன்

(ஹனபி ஷாபியீ இரு மதுஹபுகளுக்கும் தனித்தனி புஸ்தகம்)

கலிமாக்கள், ஈமான், இஸ்லாம், உலு, முழுக்கு, ஹைலு, நிபாஸு தண்ணீர், தயம்மம், நஜீஸு, தொழுகைகளின் வக்துகள், தொழுகைகளின் வரிசைகள்,

தொழுகையை விட்டவனுடைய வேதனை, தொழுகையின் பறுலுகள், தொழுகிற ஒழுங்கு, ஜமாஅத்துடன் தொழுகிற வரிசைகள், வித்ரு தொழுகை, நபில் தொழுகை, தருவீஹ் உடைய வரிசைகள், ஜும்ஆ உடைய வரிசைகள், மையத்துடைய விஷயங்கள், ஸகாத்தின் பயான், நோன்புடைய வரிசைகள், ஹஜ்ஜுடைய வரிசைகள், நபி நாயகம் (ஸல்) அவர்களின் ரவுலா ஷரீபை ஸியாரத்துச் செய்கிறது ஆகிய இந்த விஷயங்களைப் பற்றி பேசும் பாடங்கள் இதில் நிறைந்திருக்கின்றன.

இவைகள் அல்லாமல் இன்னும் எண்ணற்ற விஷயங்கள் இந்த புஸ்தகத்தின் தக்மிலா என்று சொல்லப்படும் பாகத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

| | |
|---|---|
| ஹனபி மதுஹபிற்குரியது தமிழ்—அறபி வார்த்தைகள் அறபியிலும் சேர்க்கப்பட்டது, | விலை ரூ. 1 – 00 |
| ஷ்ஷ அறபுத் தமிழ் போட்டோ அச்சு கலிகோ பைண்டு | ரூ. 1 – 80 |
| ஷ்ஷ தமிழ் ஷாபி மதுஹபுக் குரியது—அறபி வார்த்தைகள் அறபியிலும் சேர்க்கப்பட்டது | ரூ. 1 – 00 |
| ஷ்ஷ அறபுத் தமிழ் போட்டோ அச்சு ஷாபி மதுஹபுக் குரியது கலிகோ பைண்டு | ரூ. 1 – 80 |

## இரத்தின விலாசம் நஸீஹத்துலாசம்

அல்லாஹ் றஸூலைக் கொண்டு ஈமான் கொண்ட ஒவ்வொரு முஸ்லிமும் படித்தறிந்து அமல் செய்ய வேண்டிய அருமையான நூல் இது. பிரபல இஸ்லாமிய அரபு கிரந்தங்களாகிய கஜானத்துல் அஸ்ரார், ஷிர்ஹத்துல் இஸ்லாம், ரத்துல் முக்தார், துர்ரத்துன் நாஸிஹீன் முதலிய கிதாபுகளி லிருந்து திரட்டி யெடுத்தெழுதப்பட்ட அருமையான நஸீஹத்துகளும், மஸ்அலாக்களும், ஹதீதுகளும் ஹிக்காயத்துகளும் நிறைந்த நூல் இது. ஒவ்வொருத்தருடைய கையிலும் இருந்து தீர வேண்டிய புஸ்தகம். தமிழ் முஸ்லிம்களுக்கு இன்றி யமையாத நூல். இதன் அருமை நேரில் பார்த்தால் தெரியவரும். சுத்தத் தமிழ் விலை ரூ. 1 – 60

## இஹ்யா உலூமுத்தீன் மொழி பெயர்ப்பு

(புதிய இரண்டாம் பதிப்பு)

(தமிழ்)

இஸ்லாமிய சன்மார்க்க ஞானப் பொக்கிஷமாய் விளங்குவது இமாமுல் மஃரிபத் வத்தரீகத் ஹஜ்றத்இமாம் கஸ்ஸாலி ரஹ்மத்துல்லாஹ் அலைஹி அவர்கள் அரபு பாஷையில் இயற்றிய இஹ்யா உலூமுத்தீன் என்னும் பாரதூரமான கிரந்தம். அது மௌலவி ஆலிம்களுக்கு மதரஸாக்களில் கற்பிக்கப் படுத்துவது யாவரும் அறிந்த விஷயம். அந்த அற்புதமும் மகிமையும் வாய்ந்த இஸ்லாமிய ஞானமார்க்க நூலின் மொழி பெயர்ப்பே இந்த இஹ்யா உலூமுத்தீன் ஆகும். அரபு உர்து தெரியாத தமிழ் முஸ்லிம்களும், இஸ்லாமிய அனுஷ்டானத் தத்துவ ஞானங்களையும், இக்கித்தாபின் வாயிலாய் ஐயமறத் தெரிந்து கொள்ளலாம். இதில் ஷரீஅத், தரீகத், மஃரிபத், ஹகீகத், என்னும் நான்குவித மார்க்கங்களும் விளக்கப்பட்டிருக்கிறது. ஈமான், இஸ்லாம், அகீதா, ஹதீஸ், தலீல் முதலிய ஆதாரங்களோடு, இஸ்லாம் மதானுஷ்ட சட்டதிட்ட பர்லு, ஸுன்னத்து, முஸ்தஹப்பு, மக்ரூஹ், ஹராம் முதலிய மஸ்அலாக்க ளெல்லாம் இந்நூலின் கண், மிகத் துலாம்பரமாய் விளக்கப்பட்டிருக்கிறது. இதன் பெருமை எழுதிச் சொல்லித் தெரியக் கூடியதில்லை. இந்த நூலினைக் கையில் எடுத்துப் படித்துப் பார்த்தாலே தெரியவரும்.

நெடு நாட்களுக்குப் பிறகு இந்நூல் அச்சாயிருப்பதால் பிரதிகளுக்கு ஆர்டர் தாமுந்திக் கொள்ளுங்கள். இதன் விலை ரூ. 5–00

# கீமியாயே ஸஆதத்து

தமிழ் பொழிப்புரை.

1-வது, 2-வது, 3-வது, 4-வது ஆக 4-வால்யங்கள்.

இது நாயகம் இமாமுல் கிராம் ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் அபூஹாமிது முஹம்மது கஸ்ஸாலி றஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களால் இயற்றப் பட்டதும் அரிய ஞான இரகசியங்கள் அடங்கியதுமான ஓர் பெரிய நூல். இந்நூலாகிறது மிகவும் கீர்த்தி பெற்று ஞானப் புதைய லென்றும், விவேகப் பொக்கிஷ மென்றும் விளங்கி வரும் "இஹ்யா உலூமுத்தீன்" என்னும் கிதாபில் நின்றும் கடைக்தெடுத்த கைவல்லியமாகும். இது உர்தூ பாஷையில் "கிமியாயெ ஸஆதத்து" என்னும் நாமம் பெற்று அருமையாய் விளங்கி வந்தது. இதனை அறபி, பார்ஸி, உர்தூ, தமிழ் பாஷைகளில் தேர்ந்த ஆலிமாய் விளங்கிய நெல்லிக்குப்பம் கனம் அல் ஆலிமுல் பாழில் மவுலானா மௌலவீ அப்துல் றஹ்மான் ஸாஹிபு அவர்களால் தமிழில் இலேசான நடையில் வசன ரூபமாய் இயற்றப்பட்டது. இந்த கிதாபின் சில விஷயங்களாவன:—

1-வது, தன்னையும் தனக்கு ஆதாரமான தலைவனையும் அறியாமல் பின்னை யொன்றை தானென்றும் தலைவனென்றும் கருதுகிற பேர்களுக்கு இக்கிதாபு உணர்வை வரவைக்கும்.

2-வது, அநாதார பதர் மொழிகளால் நிறைந்த சில அஞ்ஞான புத்தகங்களை மெஞ்ஞான பொக்கிஷங்களென மதித்து மருண்டு கிடக்கின்ற மதியீனர்களின் மனதைத் திருப்பும்.

3-வது, இகபரங்கள் இன்ன தென்றறியாமல் இலோக இச்சைகளிலேயே மூழ்கி இரவும் பகலும் இதற்கே தொண்டு செய்து பரலோக வாழ்க்கையைப் பற்றி சிந்திக்கா திருக்கிற பேதை மாந்தர்களுக்கு இகபர விருப்பத்தை யூட்டும்.

4-வது இபாதத்து செய்கிறவர்களுக்கு சுன்னத்து ஜமாஅத்துகளின் இஃதிகாது, இல்மை தேடல், ஒலுவு, முழுக்கு, தயம்மம் முதலிய சுத்தி வகைகள், தொழுகை, நோன்பு, ஸக்காத்து, ஹஜ்ஜு, குர்ஆன் ஓதல், திக்று அவ்ருது இவைகளின் அஹ்காம் களும் அஸ்ருருகளும் சொல்லப்பட்டிருப்பதால், இது அமல் செய்கிறவர்களுக்கு மிகவும் பிரயோஜனத்தைக் கொடுக்கும். இதன் அருமை கிதாபை பார்த்தால்தான் அறியலாம்.

இதன் 1-வது வால்யத்தில் இபாதத்துகளுடைய பயானும் 2-வது வால்யத்தில் முஆமலாத் துடைய பயானும், 3-வது வால்யத்தில் முஹ்லிகாத்தின் பயானும், 4-வது வால்யத்தில் முன்ஜியாத் துடைய பயானும் அடங்கி யிருக்கின்றன.

| | | |
|---|---|---|
| 1-வது வால்யம் புதிய அச்சு கலிகோ பைண்டு | விலை ரூ. | 3—00 |
| 2-வது வால்யம் புதிய அச்சு கலிகோ பைண்டு | விலை ரூ. | 3—60 |
| 3-வது வால்யம் புதிய அச்சு கலிகோ பைண்டு | விலை ரூ. | 5—00 |
| 4-வது வால்யம் புதிய அச்சு கலிகோ பைண்டு (அச்சாகிறது) | விலை ரூ. | 5—60 |
| ஷை அறபுத் தமிழ் முதற் பாகம் கலிகோ பைண்டு | விலை ரூ. | 5—00 |
| ஷை 2-வது பாகம் கலிகோ பைண்டு | விலை ரூ. | 6—00 |

நெல்லிக் குப்பம் மவ்லானா மௌலவி அப்துர் றஹ்மான் ஆலிம் ஸாஹிபு அவர்களின் சரித்திரம். விலை ரூ. 0—20

# தவத்துது என்ற வெள்ளாட்டி மஸ்அலா

பக்தாத் என்னும் தேசத்தில் தாருஸ்ஸலாம் என்னும் பட்டணத்தில் ஒரு பெரிய பணக்கார வியாபாரியின் மகனான பதருஸ்ஸமான் என்பவர், தனது காலஞ்சென்ற தகப்பனாரின் நல்லுபதேச ஒசியத்தை மறந்து, பாவங்கள், அழிச்சாட்டியங்களில் துணிந்து வீண் செலவுகள் செய்து, ஆஸ்தி முழுவதையும் இழந்து விட்டார். அவரிடம் தவத்துது

என்ற வெள்ளாட்டியைத் தவிர யாதொரு வஸ்துவும் இல்லாமலாகி விட்டது. அச்சமயத்தில் அவ்வெள்ளாட்டி, தன்னை அவ்வூர் பாதுஷாவான ஹாரூன் ரஷீதிடம் விற்று தனக்குரிய கிரயம் பதினாயிரம் தங்கக்காசு வாங்கிக் கொள்ளுமாறு, தனது நாயன் பதருஸ்ஸமானிடம் சொன்னாள். அதன்படி பதருஸ்ஸமான், பாதுஷாவிடம் வெள்ளாட்டியைக் கொண்டு போய், பதினாயிரம் தங்கக்காசு கேட்க, பாதுஷா, ஒரு சாதாரண வெள்ளாட்டிக்கு பதினாயிரம் தங்கக்காசு கொடுக்க இயலாதென்றார். அதன் பேரில், அவ்வெள்ளாட்டி சாதாரணமானவளல்ல வென்றும், மார்க்க அறிவுகளில் மிக தேர்ந்தவளென்றும் சந்தேகப்படில் சோதிக்குமாறும் பதருஸ்ஸமான் சொன்னார். அப்பொழுது பாதுஷா, தனது சபையிலுள்ள அறிவுள்ள உலமாக்களைப் பார்த்து, அவ்வெள்ளாட்டியிடம் மார்க்க அறிவுகள் விஷயமாக கேள்வி போட்டு சோதிக்குமாறு உத்திர விட்டார்.

இந்த கிதாபு, அமீருல் முஃமினீன் சுல்தான் ஹாரூன் ரஷீது ரஹமதுல்லாஹி அலைஹி அவர்கள் முன்னிலையில் உலமாக்களுக்கும் தவத்து தென்ற வெள்ளாட்டிக்கும் நடந்து சுவால், ஜவாபாகிய ஹதீது கிஸ்ஸாவைப் பொதிந்துள்ளது. யாவரும் இந்த கிஸ்ஸா ஹதீது முற்றும் படித்து அதன்படி அமல் செய்து வந்தால், அவர்களுக்கு மிகுந்த அறிவுகளும் தவாபுகளும் உண்டாகு மென்பதில் ஐயமில்லை. ஆதலால் ஒவ்வொரு முஸ்லிமும் இக்கிதாபை வாங்கி படித்து பிரயோஜன மடைவீர்களாக:

இதன் விலை தமிழில் ரூ. 2 – 00
ஷி அறபுத் தமிழில் விலை ரூ. 2 – 60

# தர்த்தீபுஸ்ஸலாத் என்னும் தொழுகையடவு ஹனபி

### சுத்தத் தமிழ்

மூன்றும் பதிப்பு வெளிவந்து விட்டது.

இதில் ஐந்து கலிமாக்கள், இஸ்லாத்தின் இயல்பு, ஈமான் நிலை, முழுக்கின் விதிகள், உலுவின் ஸுன்னத்துகள், உலூவின் துஆ, தொழுகையின் பர்ளுகள், தொழுகையின் வாஜிபுகள், பாங்கு இகாமத்து, பாங்கு துஆ, ஐந்து தொழுகையின் தக்பீர்கள், ஸுன்னத்து தொழுகை தக்பீர், அத்தஹிய்யாத், இஸ்திக்பார், பொதுவான துஆ, ஐந்து தொழுகையின் துஆக்கள், கஸ்ரு தொழுகை, கஸ்ரு தொழுகைத் தக்பீர், ஜும்ஆ தொழுகை, அதன் தக்பீர், ஸஜ்தா திலாவத், நோன்பின் ஷர்த்து, நோன்பின் நிய்யத்து, நோன்பின் முறிச்சல்கள், நோன்பு திறக்கும் போது ஓதுகிற துஆ, தராவீஹின் விபரம், தராவீஹுடைய தக்பீர், நோன்பு பெருநாள் தக்பீர், ஹஜ்ஜு பெருநாள் தக்பீர், தக்பீரு தஷ்ரீகி, மையத்துக்கு செய்யும் முறைகள் ஆகிய இவைகளும் மற்றும் விபரங்களும் அடங்கி இருக்கின்றன.

தமிழும் அரபியும் கலந்தது. இதன் விலை ந பை. 28
ஷி அறபுத் தமிழ் விலை ந பை. 52

[ஹதீதுகள்]

# நபி நாயகத்தின் திருவாக்கியம்

(மிஷ்காத்தே ஷரீபின் மொழி பெயர்ப்பு)

(முதற் பாகம்)

இதில் நமது நாயகம் முஹம்மது முஸ்தபா றஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய ஹதீதுகள் அடங்கி இருக்கின்றன. முதற்

பாகம் 930 ஹதீதுகள் அமைந்தது. டிம்மி 1-8 ஸைஸில் 288 பக்கங்கள் கொண்டது. கிளேஸ் காகிதம் கலிகோ பைண்டு. ரூ. 2 - 40

# நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் குர்ஆனின் நல்லுபதேசமும்

(முதல் பதிப்பு)

இதில் நமது நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள் அவதரித்தது முதல் வபாத்து வரை சுருக்கமாக விபரித்து எழுதப்பட்டுள்ளது. இத்துடன் நாயகம் (ஸல்) அவர்கள் தமது உம்மத்துமார்களுக்கு மொழிந்தருளிய உபதேசங்களும், குவலயத்தோர்க்கு குர்ஆன் ஷரீம் கூறும் செய்திகளுள் சிலதும் சேர்க்கப்பட்டுள்ளன. 115 பக்கங்கள் கொண்டது. விலை ரூ. 1-00

# நஸ்ஹுல் ஹதீது, வபத்ஹுல் மஜீது

இவ்வுலகில் இன்ஸானாகப் பிறந்த ஒவ்வொருவரும், சிருஷ்டிகர்த்தாவாகிய அல்லாஹு தஆலாவை அறிந்து ஹகீகத்தை உணர்ந்து இபாதத்து செய்ய வேண்டியது அத்தியாவசியக் கடமை: இதற்கு இல்மு, ஒழுக்கம், ஈமான், இஸ்லாம், அமல், ஷரீஅத் முதலிய முஆமலாத்துகளைத் தெரிந்து கொள்ள வேண்டியது முதற்பெரும் கடமையாகும்.

இந்த அரிய பெரிய நூலாகிய "நஸ்ஹுல் ஹதீது வபத்ஹுல் மஜீது" என்பது நமது நபிகள் நாயகம் ரஹ்மத்துல்லில் ஆலமீன் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் திருவாய் மலர்ந்தருளிய ஹதீதுக ளென்னும் திருவாக்கியங்களைக் கொண்டும், ஸஹாபாக்கள், ஒலிமார்கள், ஸாலிஹீன்கள், நாதாக்களுடைய நஸீஹத்துகள், ஹிக்காயத்துகள், முதலிய உபதேச உபமேய ஆகமங்களை ஆதாரமாகக் கொண்டும், தீனுல் இஸ்லாத்தின் எல்லா மஸ்அலாக்களையும், விஷயங்களையும். தத்துவங்களையும் எடுத்தோதும் அற்புதமான நூலாகும். இந்த ஒரு கிதாபு மட்டும் கையில் யிருந்து விட்டால் தமிழ் முஸ்லிம்களுக்கு வேறெந்த கிதாபின் தேவையும் இராது. அதாவது இதில் இல்லாத விஷயமே இல்லை யென்று சொல்லலாம். இதன் அருமை நேரில் பார்த்தாலே தெரிய வரும்.

620-பக்கங்கள் கொண்டது. பெரிய ராயல் ஸைஸ், கிளேஸ் காகிதம் கலிகோ பைண்டு (அச்சாகிறது) விலை ரூபாய். 8 - 00

# பத்ஹுர் ரஹ்மான் பில்பிக்ஹின் னுஃமான்

(ஹனபி மதுஹபுக்குரியது)

பிரயோஜனமான கல்வி, பிரயோஜன மில்லாத கல்வி என்று இரண்டு வகையுண்டு. உலக வாழ்வை மட்டும் நமக்கு எடுத்துச் சொல்வது பிரயோஜன மில்லாத கல்வி. நம் மனமும் ஒழுக்கமும் சீர்பெற்று மறுமையில் நமக்கு ஈடேற்றம் தரக்கூடியதே பிரயோஜனமான கல்வியாகும்.

தீனுல் இஸ்லாத்தின் தத்துவங்களையும், அனுஷ்டான ஒழுக்க முறைகள் என்னும் பிக்ஹு மஸ்அலாக்களையும் கற்றறிந்து அமல் செய்ய வேண்டியது ஒவ்வொரு முஸ்லிமுடையவும் கடமையாகும். இதுதான் இம்மை, மறுமை இரு லோகத்திலும் பிரயோஜனம் தரவல்லது.

இந்த நூலில் ஒவ்வொரு முஸ்லிமும் அறிந்து ஒழுக வேண்டிய எல்லா விஷயங்களும் அடங்கி யிருக்கின்றன. உதாரணமாக ஈமான், இஸ்லாம், கலிமா, பரிசுத்தம், தொழுகை, ஜும்ஆ மகிமை, ஜியாரத்துல் குபூர், ஜக்காத்து, நோன்பு, ஹஜ்ஜு முதலிய மஸ்அலாக்களும், இஸ்லாமிய ஒழுக்கம், ஸுன்னத்தின் சிறப்பு, ஸபருடைய ஒழுக்கம் இபாதத்தின் மகிமை மற்றும் சகலவிதமான போதனைகளும் அடங்கி யிருக்கின்றன.

நல்ல சுத்த தமிழில் இனிய நடையில் எழுதப்பட்ட புதிய நூல்—புதிய பதிப்பு. ஆங்கு அரபு மொழியில் ஓத வேண்டிய கலிமா, துஆ முதலானவைகள் அறபிலேயும் அமைக்கப்பட்டுள்ளன. இதன் அருமை நேரில் பார்த்தால் தான் தெரியும்.

இதன் விலை ரூ. 3

ஷை அறபுத் தமிழ் அல்பத்ஹுர் றப்பானி–பி–பிக்ஹே நிஃமானி விலை ரூ. 5

# மஜ்மூஉ மவ்லூது

இதில் றஸூலுல்லாவுடைய மவுலூதும், அதன் துஆக்களும், அந்த மௌலூதின் வரிசைகளும், ஒவ்வொரு பைத்தின் தலைப்பில் அதற்குள்ள ஸலவாத்துப் பாட்டுகளும், அதபுகளும், இத்துடன் முஹ்யித்தீன் ஆண்டவர்கள் மவுலூதும், அதன் துஆக்களும், அதன் வரிசைகளும், மீரான் ஸாஹிபு ஆண்டவர்கள் மவுலூதும் அதன் துஆக்களும், அதன் வரிசைகளும், யாஸெய்யதி, யாகுத்பா, யாஸைய்யிதி ஷைகி, மழை பைத்து, ஜுத்பி லுத்பிக முனாஜாத்தும், ஃஹுப்பி ஸைய்யிதினா பைத்து முதலியவைகளும் தமிழால் சுத்தமாய் எழுதி கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டது.

கலிகோ பைண்டு செய்யப்பட்டிருக்கிறது விலை ரூ. 1 – 00

ஷை மூன்று மவ்லூதுகளும் அறபியில் கிளேஸ் காகிதம் கலிகோ பைண்டு.

விலை ரூ. 1 – 80

# மஜ்மூஉஸ் ஸலவாத்து

இப்புத்தகம் அல்லாஹு தஆலாவின் அஸ்மாவுல் ஹுஸ்னாவைப் பொதிந்த துஆ கன்ஜுல் அர்ஷும் இன்னும் நபிகள் நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்கள் பேரில் எப்போதும் நேமமாய் ஓதி வருகிற ஸலவாத்துகளில் மிகவும் புகழானதும் மற்றும் ஸலவாத்துக் கெல்லாம் தாயானதுமான உம்மு ஸலவாத்தும், இன்னும் அல்குத்புர் றப்பானீ வல்கவ்துஸ் ஸமதானீ முஹ்யித்தீன் அப்துல் காதிரி ஜைலானி றலியல்லாஹு அன்ஹு அவர்கள் பேரில் ஓதப்படும் கவ்திய்யா ஸலவாத்தும், இன்னும் ஸெய்யிதினா குத்புல் அக்தாபு வகவ்துல் அஃபாபு ஜிந்தா ஷாஹ் மதார் பதீவுத்தீன் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் பேரில் ஓதப்படும் மதாரிய்யா ஸலவாத்தும், இன்னும் அநேக சில்லரை ஸலவாத்துகளும், துஆக்களும் ஒருங்கே சேர்ந்த அருமையான கிதாபு. சுத்தத் தமிழில் சிறியதாய் பாக்கெட் புத்தகம் போல் கிளேஸ் காகிதத்தில் அழகாய் அச்சிடப்பட்டு கலிகோ பைண்டு செய்யப்பட்டிருக்கிறது.

விலை ரூ. 1 – 00

ஷை அறபுத் தமிழ் விலை ரூ. 1 – 00

# மஜ்மூஉ ஸூறத்துல் குர்ஆன்

இந்த கிதாபாகிறது அறபு ஓதாதவர்கள் தொழுகையில் ஓத வேண்டிய ஸூறாக்களைக் கற்றுக்கொள்வதற்கு மிக்க அவசியமானது. இதில் அம்மயத் ஜுஸ்விலுள்ள தொழுகைக்கு அவசியமான ஸூறாக்களான அல்ஹம்து ஸூறா முதல் ஸூறத்துல் புருஜ் வரை 31 ஸூறாவும், இன்னும் குர்ஆனில் மிகவும் உயர்த்தியான 9 ஸூறாக்களும், இன்னும் ஸூறத்து யாஸீனும், யாஸீனுடைய துஆக்களும், இன்னும் அநேக சில்லரை துஆக்களும் சேர்ந்தது. அறபி ஒரு வரியும் அதைத் தமிழில் ஒரு வரியுமாக திரமான

கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. இதைத் திருத்தமாய் ஓத ஒரு காயி தாவும் சேர்க்கப்பட்டிருக்கிறது.
(அச்சாகிறது) கலிகோ பைண்டு விலை ரூ. 3 – 20

# மிப்தாஹுஸ்ஸலாஹ் பீ யீலாஹின்னிகாஹ்

(இப்புத்தகம் இல்லறவாசிகள் ஒவ்வொருவருக்கும் அவசியம் வேண்டியது)

இதில் நிக்காஹுடைய வரிசைகளும், அஹ்காம்களும், ஸ்திரி புருஷருடைய குண லக்ஷணங்களும், ஒவ்வொருவரும் இன்ன குணமுடையவர்களென்று பார்த்த மாத்திரத்தில் கண்டறியக்கூடிய வழியும், ஸ்திரீ புருஷர்கள் அவசியம் அறியவேண்டிய அநேக ரகசியங்களும், ஒரு புருஷன் விரும்பிய மனைவியையும், ஒரு ஸ்திரீ விரும்பிய கணவனையும் அடைவதற்கு வேண்டிய இஸ்முகளும் அடங்கியிருக்கின்றன.

இவையன்றி ஸ்திரீ புருஷருக் கிடையில் முஹப்பத் உண்டாவதற்கும் ஹமல் உண்டாவதற்கும், ஹமலைக் காப்பதற்கும் அவசியமான இஸ்முகளும், ஹமலில் உண்டாகக் கூடிய பலவகை வியாதிகளுக்கு அரிய ஔஷதங்களும் கூறப்பட்டிருக்கின்றன.

முன் பதிப்பி லிருந்ததைவிட இப்பதிப்பில் அநேக அரிய விஷயங்களும் இஸ்முகளும் சேர்க்கப் பட்டிருக்கின்றன. வாசிப்போர்க்கே இந்நூலின் அருமை விளங்கும்.
புதிய பதிப்பு கிளேஸ் காகிதம் கலிகோ பைண்டு விலை ரூ. 3 – 00

# மிப்தாஹுஸ் ஸுபுஹானி பீ தர்ஜுமத்தி மஜ்முஉஸ் ஸுல்தானி

இந்த கித்தாபாகிறது ஹனபீ மதுஹபுக்கும் ஷாபிஈ மதுஹபுக்கும் அவசியமாகிய நூதனமான ஹுக்முகளைப் பொதிந்த பிக்ஹு மஸ்அலாக்களாகும். அதினின்றும் ஒவ்வொரு ஹுக்மையும் சகல ஜனங்களும் இலகுவாயறியும் பொருட்டு ஸுவாலும் ஜவாபுமாக சேகரிக்கப் பட்டிருக்கிறது. இது சுல்தான் மஹ்மூது கஸ்னவீ றஹிமஹுல்லாஹு அவர்களால் தங்களுடைய காலத்தில் உள்ள அநேக உலமாக்களின் உதவியால் சேகரிக்கப் பட்டு பார்ஸீ பாஷையிலும் உர்து பாஷையிலும் அருமையாய் விளங்கி வந்ததை நம்மவருக்கு உபயோகமாகும்படி தமிழிலும் அரபுத் தமிழிலும் அச்சிடப் பட்டிருக்கிறது.
கிரையம் சுத்தத் தமிழ் கிளேஸ் காகிதம் கலிகோ பைண்டு ரூ. 2 – 60
ஷெ அரபுத் தமிழ் வெள்ளை காகிதம் கலிகோ பைண்டு ரூ. 5 – 00

# மிஃருஜுல் ஆரிபீன் பீ தர்ஜுமத்தி மின்ஹாஜில் ஆபிதீன்

(புதிய பதிப்பு)

"மிஃருஜுல் ஆரிபீன்" என்பது பதினான்கு இல்முகளுக்கும் ஓர் அலை கடலாகிய நாயகம் இமாம் கஸ்ஸாலி றஹிமத்துல்லாஹி அலைஹி அவர்கள் இயற்றியுள்ள ஞானநீதக் களஞ்சியமான 'மின்ஹாஜில் ஆபிதீன்' என்னுங் கிரந்தத்திலிருந்து வெகு நுட்பா நுட்பமாக மொழி பெயர்த்ததோர் அரிய சாதனமாகும்; அறிவுக்கு ஆகாரமாம். இதில் அடங்கியிருக்கும் 'மஃரிபா' என்னும் தீட்சை ஞானத்தின் பாகுபாடுகளையும், சேர்வழிக்குரிய சாதனத் தெளிவுகளையும், யோகாப்பியாச முறைகளையும் பற்றி விவரித்தெழுத வேண்டுமானால் எவ்வளவு நீடித் தெழுதினாலும் முடியாது. கோட்டமிட்ட நண்பர்களுக்கே இதன் அருமை விளங்கும். சுத்தத் தமிழ் கலிகோ பைண்டு விலை ரூ. 4

# முஹிம்மதுஸ்ஸிப்யான் பீ மஸ்ஹபி ஹனீபதின் நுஃமான்

(தமிழில் முதற் பதிப்பு)

இந்த புஸ்தகத்தில் ஐந்து கலிமாக்கள், ஈமான் முஜ்மல், ஈமான் முபஸ்ஸல், தொழுகைகளின் நிய்யத்துகள், பெண்ஜாதி புருஷன் ஜிமாவு செய்தாலும் ஷைதான் ஹறகத்து செய்தாலும் முழுக்கு நிய்யத்து, பெண்பிள்ளை ஹைலு வந்து முழுகிற நிய்யத்து, நோன்புகளின் நிய்யத்துகள், பெருநாள், மையித்து, தஹஜ்ஜுது தொழுகைகளின் நிய்யத்துகள், தொழுகையில் வெவ்வேறு இருப்பில் ஓத வேண்டியவைகள், உலு சம்பந்தப்பட்ட ஓதல், கப்ருளி பேரில் பாத்திஹா சொல்லல், பின்பு ஓதும் துஆ, சாப்பிட்ட பின் ஓதும் துஆ, தராவீஹுடைய தஸ்பீஹுடைய, தருவீஹுடைய, துஆ, தல்கீன் ஆகிய இவைகளும் இன்னும் மற்ற விஷயங்களும் சேர்த்திருக்கின்றன. இதன் விலை ரூ. 0–28

மேற்படி அறபுத் தமிழ் விலை ரூ. 0–28

# ழுறூறுல் மூஃமினீன்

இது ஓர் அரிய நூல். 12-பாகங்கள் கொண்டது. இதன் அமைப்பு அசல் தமிழ் ஒரு வரியும், அசல் அரபு ஒரு வரியுமாக கலந்து எழுதப்பட்டது. தமிழ் தெரிந்தவர்களுக்கும், அரபு தெரிந்தவர்களுக்கும் மிகப் பிரயோஜனமான நூல்; இது பரியந்தம் இவ்வளவு அருமையான நூல் வெளிவந்ததே யில்லை. இவற்றுள் அடங்கியுள்ள விஷயங்களைச் சுருக்கமாய்ச் சொல்லுகிறோம்:—

1-வது பாகத்தில் ஐந்து கலிமாக்களும், அவைகளின் அர்த்தங்களும் ஈமான் இஸ்லாமை அறியும் விபரங்களும், குஸுல், முழுக்கு, தொழுகை முதலியவைகளில் அவசியமாய் ஓத வேண்டிய ஓதல்களும் துஆக்களும் எழுதப் பட்டிருக்கின்றன.

2-வது பாகத்தில் தீனிலும் துன்யாவிலும் ஆகிரத்திலும் வாழ்நாட்களிலும் பெறக்கூடிய கணக்கற்ற பிரயோஜனங்கள் உள்ளன. அவையாவன:—வாரம் ஏழு நாட்களிலும் ஓத வேண்டிய மேன்மை பெற்ற ஏழு ஹைக்கலும், ஹிஸ்புல் பஹ்ரும், ஹிஸ்புன்னஸரும், துஆ ஐயாமுல் பீலும், துஆஉல் அர்ஷும், அஜாயிபுல் இஸ்திக்பாரும் அல்லாஹுத் தஆலாவின் திருநாமங்களாகிய அஸ்மாஉல் ஹுஸ்னாவும், நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய திருநாமங்களாகிய அஸ்மாஉன் நபியும், ஸெய்யிதினா முஹ்யித்தீன் அப்துல் காதிரி ஜீலானி றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய திருநாமங்களாகிய அஸ்மாஉல் கௌதுஸ் ஸமதானியும், இவை ஒவ்வொன்றுக்குள்ள காஸியத்துகளும் தெளிவாய் எழுதப்பட்டிருக்கின்றன.

3-வது பாகத்தில் 'பவாயிதுல் குர்ஆன் வமனபிஉல் அஸ்மா' என்னும் பாயிதாக்களும் அஸ்மாக்களுடைய பிரயோஜனங்களும் அடங்கி யிருக்கின்றன. அவையாவன:—ஹாஜத்துகள் நிறைவேறுகிறதற்கும், கடனும் மிடுமையும் நீங்குகிறதற்கும், றிஸ்கு விஸ்தீரணமாகிறதற்கும், ஹயாத் நீளமாகிறதற்கும், வியாபாரம் பெருகுவதற்கும், சரக்குகள் மிகுதமாய் விற்கிறதற்கும், லாபம் அதிகமாய் கிடைக்கிறதற்கும், வாழ்வும் பறக்கத்து முண்டாகிறதற்கும், புருஷன் பெண்ஜாதிக் கிடையிலும், மற்றவர்களுக் கிடையிலும் முஹப்பத் உண்டாகிறதற்கும், இணங்காத பெண்பிள்ளை, அல்லது புருஷனை இணங்க வைக்கிற தற்கும், நாடிய பெண்ணை நிகாஹ் செய்கிறதற்கும், மறைந்த செயலை அல்லது வஸ்துவை வெளியாக்குகிறதற்கும், புருஷன் தாகத் பெறுவதற்கும், ஹமலுண்டாகிறதற்கும், மலடு நீங்குவதற்கும், நாடின பிரகாரம் ஆண் குழந்தை பெறுகிறதற்கும், கர்ப்பத்தையும் சிசுவையும் காக்கிறதற்கும், பேறுகாலம் ஸலாமத்தாகிறதற்கும் உள்ள பாயிதாக்கள் நிறைந்திருக்கின்றன.

4-வது பாகத்தில் ஷைத்தான் முடுகாம லிருக்கிறதற்காகவும், ஷைத்தானை விரட்டுகிறதற்காகவும், ஜின் ஷைத்தானை விட்டு அச்சந்தீர்கிறதற்காகவும், ஷைத்தானை ஹலாக்காக்குகிறதற்காகவும், ஜின்னை விலக்குகிறதற்காகவும், ஜின்னை ஹாஸிராக்குகிற தற்காகவும், மைதடவி கோட்டமிடுகிறதற்காகவும் வஸ்வாசு, கல்பு திடுக்கம், திகில், பயம், பைத்தியம், ஸிஹ்ரு, சூனியம் முதலிய கெட்ட கியாலாத்துகளையும், செயல்களையும், நீக்குகிறதற்கு முள்ள பாயிதாக்கள் நிறைந்திருக்கின்றன.

ஷை 4-பாகமும் சேர்த்து கலிகோ பைண்டு விலை ரூ. 5–32

ஷை 5-வது பாகத்தில் "பவாயிதுல் குர்ஆன் வமனபிஉல் அஸ்மா" என்னும் பல பிரயோஜனமான விஷயங்கள் அடங்கியுள்ளன. அவைகளாவன:—

(1) கண் திருஷ்டிக்கும், கண் திருஷ்டியா அல்லவா வென்றறிகிறதற்கு முள்ள பாயிதாக்கள்; (2) இராஜாக்கள், தலைவர்கள் முதலானவர்களுடைய தீங்குகளை விட்டும் அச்சந்தீர்வதற்கும் அவர்கள் நம்மீது முஹப்பத் வைப்பதற்கும், நாம் கேட்கும் வாக்குகள் நிறைவேறுகிறதற்குமுள்ள பிரயோஜனங்கள்; (3) சத்துராதிகளை அடக்கி ஆளுவதற்கும், படைகளை வெல்லுவதற்கும், படைகள் முறிந்தோடுவதற்குமுள்ள பிரயோஜனங்கள்; (4) பகைவர்களுடைய தீங்குகளை விலக்குகிறதற்கும் பகையாளிக்கு உதவி கிடைக்கா திருப்பதற்கும் பகையாளியை தங்கடம் செய்கிறதற்கும் பகையாளி பயப்பட்டு வழிப்படுகிறதற்கும் உள்ள பாயிதாக்கள்; (5) வழக்காளி யிடத்தில் வழக்கை வெல்லுவதற்கும் பகையாளியுடைய வாயை அடக்குகிறதற்கு முள்ள பிரயோஜனங்கள்; (6) ஆபத்துகளை விலக்குகிறதற்கும், மிடுமைகளை விட்டு மீட்சி பெறுவதற்கு முள்ள பாயிதாக்கள்; (7) பயம், துக்கம் வியாரம், சலிப்பு, வருத்தம் முதலானவை நீங்கி சந்தோஷ முண்டாகிறதற்குமுள்ள பாயிதாக்கள்; (8) பாம்பு, நட்டுவாக்களி, தேள், பேன், கரையான், எறும்பு, ஐவாய் மிருகம் இவைகளுடைய தங்கடத்தை விட்டும் அச்சம் தீர்வதற்குமுள்ள பிரயோஜனங்கள்; (9) பாழான வீடுகளையும் தோட்டங்களையும் பரிபாலனஞ் செய்கிறதற்கும், ஆடு மாடுகள் பால் கறக்கிறதற்கும், விருக்ஷங்களில் காய் பழம் காய்க்கிறதற்கும், பயிறு பச்சைகள் விளைகிறதற்கும், கிணறு ஆறு அருவிகளில் தண்ணீர் அதிகமாகிறதற்குமுள்ள பிரயோஜனங்கள்; (10) களவையும் நெருப்பையும் விட்டு நப்ஸையும் முதலையும் வீட்டையும் சரக்கு சாமான்களையும் காப்பாற்றுகிறதற்கு முள்ள பிரயோஜனங்கள்; (11) புதையல்களையும் மறைந்த வஸ்துக்களையும் வெளிப்படுத்துவதற்கும், மீன் அகப்படுவதற்குமுள்ள பிரயோஜனங்கள்; (12) ஊண், தீன், குடிப்புகளின் ஒழுக்கங்களும் அதில் ஓதவேண்டிய ஓதல்களின் வரிசைகளும்; (13) சொந்த பொருள், ஒளித்தோடிய ஆளடிமை காணமற்போன ஜந்து, திருடு போன சாமான் முதலானவைகளை மீள வைக்கிறதற்கும் களவு பிடிக்கிறதற்குமுள்ள பாயிதாக்கள்.

ஷை 6-வது பாகத்தில் (1) ஸபர் என்னும் யாத்திரையில் பிரயாணமாகி ஸலாமத்தாய் வீடு வந்து சேர்கிறதற்கும், காலமளிகள் நிற்கிறதற்குமுள்ள பிரயோஜனங்கள்; (2) இஷ்க், ஷஹ்வத்து, ஹவா, ஜினா, லாத்து, ஹஸது, கெடும்பு, கோபம், பகில், தகப்பர், வட்டி ஹறும் தின்னல் முதலான கெட்ட செயல்களை விட்டு விலக்குகிறதற்கு முள்ள பிரயோஜனங்கள்; (3) மறதியை விலக்குவதற்கும், பாடம் தரிபடுகிறதற்கும், பஹ்மு, அகல் கூர்மையாகிறதற்கும், ஈமான் தரிபடுகிறதற்கும், கல்பு ஒளிவாகிறதற்கு முள்ள பாயிதாக்கள்; (4) துனியாவிலும் ஆகிறத்திலும் கார்மானமும் ஈடேற்றமும் உண்டாகிறதற்கும் நற்பேரும் கீர்த்திய முண்டாகிறதற்குமுள்ள பாயிதாக்கள்; (5) நித்திரை செய்யு மிடத்தில் ஓத வேண்டிய விருதுகளும், நித்திரையில் அவசியமான விஷயங்களுக்கு வேண்டுமான விருதுகளும் (6) தலை நோய் ஜுரம், முறை ஜுரம் முதலிய மற்றும் வியாதிகளுக்கு பிரயோஜனங்கள் முதலியவை அடங்கியுள்ளன.

ஷை 7-வது பாகத்தில் (1) மனிதர்களுடைய ஜனனேந்திரங்களில் உற்பத்தியாகும் பற்பல வியாதிகளுக்கு பிரயோஜனங்கள்; (2) வியாதிகளில் நிரேகத்திற்கு மேல் பாகத்தில் (தோலின் பேரில்) சம்பவிக்கும் படியான வியாதிகளுக்கும் அதல்லாத மற்றும் வியாதிகளுக்கும் பிரயோஜனங்கள்; (3) வபா, தாஊன், ஜுத்ரி (கால்ரா, பிளேக், வைசூரி)

முதலான தொத்து வியாதிகளுக்குள்ள பிரயோஜனங்கள்; (4) யாதொரு வியாதியும் வராமல் காக்கவும் வியாதிகள் வந்தால் போக்கவும் போதுமான நக்ஷியாத்துகளின் பிரயோஜனங்கள்; (5) அல்லாஹு தஆலாவின் திருநாமங்களான அஸ்மாவுல் ஹுஸ்னவில் நின்றும் சில இஸ்முகளுடைய பிரயோஜனங்களும் நிறைந்திருக்கின்றன.

ஷை 8-வது பாகத்தில் "மஜ்மூஉல் அவ்ருத்" அதாவது அஹத் நாமா, ஸலாதுன் முஅல்லமா, ஸலாதுன் முகர்ரமா, ஸலாத்துத்தாஜ், ஸலாத்துல் லக்கி, ஸலாதுன் துன்ஜின முதலிய அநேக ஸலவாத்துகளும் துஆயே ஜமீலா, துஆயே ஹுகூக் முதலிய அநேக துஆக்களும் அதன் காஸியத்துகளும் அடங்கியுள்ளன.

ஷை 5-வது, 6-வது, 7-வது, 8-வது ஆக 4-பாகங்கள் சேர்ந்து கலிகோ பைண்டு கட்டியது. (அச்சாகிறது) விலை ரூ. 5 – 32

ஷை 9-வது பாகத்தில் (1) ஒன்பது அததுகளைக் கொண்டு பலாபலன் பார்க்கும் பால் (2) இருபத்து நான்கு வீடுகளைக் கொண்ட பால் (3) எழுத்துக்கள் அடையாளப்படி மறைவில் உள்ளதை அறியும் பால் (4) சங்கையான அவுலியாக்களுடைய பெயரால் பார்க்கும் பால் (5) 'ஸப்அ ஸய்யாரா' என்ற ஏழு நட்சத்திரங்களால் பார்க்கும் பால் (6) மனதின் நாட்டங்கள் நிறை வேறுமா என்பதை அறியும் பால் (7) வஸ்துக்கள் காணமற்போன திசையை கண்டு பிடிக்கும் பால் (8) களவாடிய திருடனைப்பற்றி தகவல்களை அறியும் பால் (9) ஸித்தாராவைக் கொண்டு ஹமலி லிருப்பது ஆண் குழந்தையா பெண் குழந்தையா என அறியும் பால் (10) அப்ஜத் எண்ணிக்கையின் விபரம் (11) அப்ஜத் எழுத்தால் நோயாளியின் விஷயங்களை அறியும் பால் (12) ஸித்தாராக்களைக் கொண்டு நோயின் காரணங்களை அறியும் பால் என பல பால் நாமாக்கள் அடங்கியுள்ளன.

ஷை 10–வது பாகத்தில் (1) அப்ஜத் எழுத்துக்களைக் கொண்டு நன்மை தீமை அறியும் பால் (2) அப்ஜத் எழுத்துக் கணக்குப்படி வியாதியை அறியும் பால் (3) சகல விதமான விஷயங்களும் எழுதி பார்த்து அறியும் பால் (4) பாஸிக்கட்டை உருட்டி அதனல் பலாபலன் அறியும் பால் (5) அப்ஜத் எழுத்துப்படி நலவு இடர்களை அறியும் பால் (6) 8 திசையிலும் ஸபர் போவதில் நலவு இடர்களை அறியும் பால் (7) ஸபர் போவதற்கு நாளும் திசையும் அறியும் பால் (8) பன்னிரண்டு மாதங்களில் எந்தெந்த நாள் நஹ்ஸு என்று அறிவது முதலியவை நிறைந்துள்ளன.

ஷை 11-வது பாகத்தில் (1) புதிய வீடு, கட்டிடம் கட்டுவதற்கு நல்ல மாதம் பார்ப்பது (2) மேற்படி வீடு கட்டுவதற்கு நல்ல நாள் பார்ப்பது (3) நிக்காஹு செய்வதற்கு நல்ல நேரம் அறியும் பால் (4) நாள்களுடைய பலாபலன் (5) முஹர்ரம் மாதம் முதல் நாளைக் கொண்டு வருஷபலன் அறியும் பால் (6) "காஸியத்துல் ஐயாம்" என்னும் எந்தெந்த நாளில் எந்தெந்த காரியம் செய்வது நலமென அறியும் பால் (7) மலட்டு காரணமும் இலாஜும் (8) குழந்தைகளுக்கு பெயர் வைக்கும் பாபு (9) நபி நாயகம் திருவாக்கியத்தின் நஸீஹத்து நாமா இவை அடங்கியுள்ளன.

மேற்படி 12-வது பாகத்தில் (1) உருப்புகள் துடிப்பதின் பலாபலன் (2) தும்மலின் பலாபலன் (3) ஏழு நாட்களில் திசைகளின் படி தும்மலின் பலாபலன் (4) பல்லி விழுவதின் பலாபலன் (5) இல்முகியாபா வென்னும் அங்கலட்சணத்தினல் நல்லவர் கெட்டவர் என அறியும் சாஸ்திரம் (6) இல்முல் ஹய்அத் என்னும் வானராசி சாஸ்திரம் (7) சூரிய ஓட்டத்தைக் கொண்டு நாழிகையும் இராசியும் அறிவது (8) யோகங்களின் விபரம் முதலியவை பொதிந்துள்ளன.

மேற்படி 9–வது, 10-வது, 11-வது, 12-வது, ஆக நான்கு பாகங்களும் சேர்ந்தது கலிகோ பைண்டு விலை ரூ. 5 – 32

மேற்படி 1-வது பாகம் முதல் 12-வது பாகம் வரை 12 பாகங்களும் சேர்ந்தது ஒரே கட்டடம் விலை ரூ. 15 – 00

மேற்படி 9-வது பாகம் முதல் 12-வது பாகம் வரை அரபு தமிழ் (மஜ்மூஅ பால் நாமா) விலை ரூ. 3 - 60

# ஸப்அ ஸனபில்

(ஹனபி மதுஹபுக்குரியது)

இந்த புஸ்தகத்தில் ஏழு புஸ்தகங்கள் அடங்கி யிருக்கின்றன. அவைகள்: (1) ஜரூருல் மூமினீன் (2) ஜரூருல் முஸ்லிமீன் (3) ஜரூருல் முஸல்லீன் (4) ஜரூருஸ் ஸாயிமீன் (5) ஜரூருல் முஜக்கீன் (6) ஜரூருல் ஹாஜ்ஜீன் (7) ஜரூருத்தாயீன்.

இத்துடன் அம்மயத் ஜூஸூ, ஈடேற்ற மாலை இவைகளும் ஞான ரத்தின குறவஞ்சி, ஞான ஆனந்தக் களிப்பு, திருமெஞ்ஞான சரநூல், ஞான நடனம் இவைகளும் சேர்ந்திருக்கின்றன.

## ஜரூருல் மூமினீன்

ஸூன்னத்து ஜமாஅத்துகளுடைய அகிதாக்களில் நின்றும் சுருக்கமாக சேகரித்து கவாஸூகளும் அவாம்களும் எளிதில் அறிந்து கொள்ளும்படி மவ்லவீ அமீனுல்லா ஸாஹிப் அஜீமாபாதி அவர்கள் உர்து பாஷையால் கோர்வை செய்து ஐனுல் ஈமான் என்று பெயர் வைக்கப்பட்டு விளங்கி வருவதை தமிழ் பாஷையில் இலேசான வாசகமாக மொழி பெயர்த்து ஜரூருல் மூமினீன் என்று பெயர் வைக்கப்பட்டது. இதில் உள்ள ரிஸாலாவை சகல இஸ்லாமான ஆண்களும் பெண்களும் மனதின் ஏட்டில் எழுதி வைப்பது அவசியமா யிருக்கும்.

## ஜரூருல் முஸ்லிமீன்

இதில் ஐந்து கலிமாக்கள், ஈமான் முஜ்மல், ஈமான் முபஸ்ஸல், எல்லா வித நிய்யத்துகள், துஆக்கள், பர்ளுகள், தொழுகை ரகஅத் விபரங்கள் இன்னும் அநேக மான விஷயங்களும் இருக்கின்றன. இதில் அறபு ஒரு வரியும் உச்சரிப்பு தமிழில் ஒரு வரியுமாக எழுதப்பட்டு இருக்கின்றன. மற்றும் அறபு வாக்கியங்களுக்கு தர்ஜூமாக்களும் செய்யப்பட்டிருக்கின்றன.

இங்கு ஆடு, கோழி முதலியவைகளை அறுக்கும் முறைகளும் அவைகளைப் பற்றிய ஹறாம், ஹலால், மக்றூஹூகள், முஸ்தஹப்புகள், ஸூன்னத்துகள் யாவும் கூறப்பட்டு இருக்கின்றன.

## ஜரூருல் முஸல்லீன்

இதில் எல்லாவித பர்ளுகள், ஸூன்னத்துகள், முஸ்தஹப்புகள், மக்றூஹூகள், வாஜிபுகள், ஹறாம்கள், முறிச்சல்கள் முதலியவை கூறப்பட்டிருக்கின்றன.

## ஜரூருஸ் ஸாயிமீன்

இதில் நோன்பின் விபரங்கள், பயான்கள், நிய்யத்துகள், முறிச்சல்கள், முஸ்தஹப்புகள் முதலியவை கூறப்பட்டிருக்கின்றன.

## ஜரூருல் முஜக்கீன்

இதில் ஸகாத்தைப் பற்றிய பர்ளு, பயான், வாஜிபு முதலியவைகள் கூறப்பட்டு இருக்கின்றன.

## ஜரூருல் ஹாஜ்ஜீன்

இதில் ஹஜ்ஜின் பர்ளு, வாஜிபு, முஸ்தஹப்பு, அதபு, மக்றூஹூகள் முறிச்சல்கள், உம்றா இவைகளின் பயான்களும், நபிநாயகத்தின் ஜியாரத்து உடைய பயானும் இன்னும் மற்றும் விபரங்களும், கூறப்பட்டு இருக்கின்றன.

ஜஸருருத் தாயீன்

இதில் முனுஜாத்து, பாத்திஹா, நிய்யத்துகள், தும்பினல் ஓதுவது, கொட்டாவி விட்டால் ஓதுவது, ஐந்து வேளை தொழுகைக்குப் பின் ஓதுவது, படுக்கையில் ஓதுவது, கனவு கண்டால் ஓதுவது, தூக்கத்தில் பய்ந்தாலும் மிரண்டாலும் நித்திரை கலைந்தாலும் ஓதுவது, உடுப்பு அணியும் போது ஓதுவது, பசியாறும் போது ஓதுவது, யூனுஸ் அலைஹிஸ்ஸலாம் மீனின் வயிற்றில் ஓதியது, தீராக் கடன் தீர ஓதுவது, தேள் கொட்டினுல் ஓதுவது, இடி இடிக்கும்போது ஓதுவது, இவைகளும் இன்னும் அநேக விஷயங்களும் இருக்கின்றன.

அம்மயத் ஜுஸு

இதில் தொழுகைக்கு வேண்டிய எல்லா ஸூறுக்களையும் அரபியிலும் தமிழிலும் போடப்பட்டு இருக்கிறது.

மேற் கூறப்பட்ட எல்லா விஷயங்களும் சேர்ந்த ஸப்அ ஸனுபில் என்னும் புஸ்தகம் கலிகோ பைண்டு செய்யப்பட்டு இருக்கின்றது. இதன் விலை ரூ. 3

# ஸூறத்து யாஸீனும், துஆவும்

யாஸீன் ஸூராவுடைய அரபு ஆயத்துகளைத் தமிழ் எழுத்தைக் கொண்டு திருத்தமாய் ஓதும்படியான அமைப்புகளுடையதாகும் இந்த கிதாபு. இதில் பெரிய துஆவும், பாத்திஹா ஓத வேண்டிய தர்த்தீபுகளும், ஒவ்வொரு விஷயத்திற்கும் ஓத வேண்டிய துஆக்களும் தல்கீனும் அதன் தர்ஜுமாவும் அத்துடன் நாகூர் ஆண்டவர்கள் பேரில் அஸ்மாவுல் இலாமும் சேர்த்து அச்சிடப் பட்டிருக்கிறது. விலை ந பை. 44

| | | |
|---|---|---|
| அறபு யாஸீன் | விலை ந பை. | 10 |
| மேற்படி 100-க்கு | விலை ரூ. | 5 – 00 |
| அறபு யாஸீன் அஸ்மாஉல் இலாமுடன் | விலை ந பை. | 12 |
| மேற்படி 100-க்கு | விலை ரூ. | 6 – 00 |

அறபு யாஸீன் அஸ்மாஉல் இலாமுடன பெரிய எழுத்து வரிக்கு வரி கோடு போட்டது. விலை நபை. 16

| | | |
|---|---|---|
| மேற்படி 100-க்கு | விலை ரூ. | 8 – 00 |
| மேற்படி மூன்று கலர் ரூபருடன் | விலை ந பை. | 18 |
| மேற்படி 100-க்கு | விலை ரூ. | 9 – 00 |

# ஜவாஹிறுல் பவாயித்

ஆரும் பதிப்பு

இப்புஸ்தகத்தில் 1-வது அல்லாஹு தஆலாவின் திருநாமங்களாகிய 'அஸ்மாஉல் ஹுஸ்னு' என்னும் அழகிய 99-இஸ்முகளும், ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே தர்ஜுமாக்களும் தக்ஸிறுகளும் காஸியத்துகளும், 2-வது 'அஸ்மாஉல் இலாம்' அதாவது நபிமார்கள் ஓதி வந்ததும் ஷுருஹை விட்டும் தனித்ததுமான 40 அஸ்மாக்களும், அவைகளில் வெளியாகும் அநேக கைபியத்து அஜாயிபு, முஃஜிஸாத்து, அஸ்ரூறு முதலான மட்டில்லாத பிரயோஜனங்களும், 3-வது ஹயாத்துல் ஹைவான்' என்னும் உயிர் பிராணிகளாகிய சகல ஜந்துக்களும் ஒவ்வொன்றின் குணகுணங்களும், அவைகளின் அவயவமென்னும் அங்கங்களால் மனிதர்களுக்கு உண்டாகும் பற்பல வியாதிகளுக்கு அவிழ்தங்களும், இன்னும் ஹதீதுகளும், ஹிக்காயத்துகளும்; 4-வது மனுமுடைய தஃபீர் என்னும் கனவு நூலும், அதில் எவ்வண்ணமாய் கனவு கண்ட காக்ஷிகளுக்கும் விரிவாகிய தஃபீர்களும், அதற்கு அத்தாக்ஷியாகிய அநேக ஹிக்காயத்துகளும் 5-வது வைத்திய சுருக்க மென்னும் சகல வியாதிகளுக்கும் நுட்ப பரிகாரங்களும், இன்னும் அநேக பாயி

தாக்களும் இருக்கின்றன. இவற்றில் அரபு இஸ்முகளை மாத்திரம் லெத்தோ கிராப்பில் அரபியிலும் மற்றவை யெல்லாம் சுத்தத் தமிழாலும் அச்சிட்டு கலிகோ பைண்டு செய்யப் பட்டது.

இதன் விலை ரூ. 6 – 00

---

## நாதாக்கள் சரித்திரம்:—

காமில் ஒலி ஹஜ்றத்

# அபூபக்கர் ஷிப்லி (ரலி) ஜீவிய சரித்திரம்

தௌஹீத் என்னும் ஏக தெய்வத்துவத்தை அறிய, சுகபோகங்களை விட்டு பக்கீர் கோலம் கொண்டு ஹக்கைக் கண்ட மஹான் ஷிப்லி (றலி) அவர்கள் ஞான மார்க்க மான தலவ்வுபுடைய தீர்க்கத்தைக் கண்டறிந்த வரலாறும், அவர்கள் புரிந்த போதனை களும், அவர்களின் ஜீவியமும் அடங்கியது.

விலை ரூ. 1 – 80

# அபூஷஹ்மா கிஸ்ஸாவும் கபன் கள்ளன் கிஸ்ஸாவும்

ஒரே புஸ்தகம்

அபூஷஹ்மா கிஸ்ஸா: உமர் (றலி) அவர்கள் இஸ்லாமிய கிலாபத் பதவியில் இருக்கும் போது நேர்மையாக வழுவா நீதி செலுத்தியதற்கு சிறந்த ஒரு அத்தாட்சியாக இருக்கிறது.

கபன் கள்ளன் கிஸ்ஸா: ஒரு கபன் கள்ளன் தனது தீய செயலிலிருந்து நீக்கப் பட்டு மோட்சம் அடைந்ததைக் கூறுவதாகும்.

இதன் விலை நபை. 32 மேற்படி அறபுத்தமிழ் விலை ந பை. 32

# இஸ்வத்து நாச்சியுடைய கிஸ்ஸா

இது ஷாம் தேசத்தி லிருந்த லாபி றென்னும் ஆலிமுடைய மகள் இஸ்வத்து நாச்சியாரின் சரிதையாகும். இதில் இஸ்வத்து நாச்சியாருக்கும் ஹபீபென்னும் ஒரு பணக்கார வியாபாரிக்கும் நடந்த நிக்காஹும், ஹபீபென்பவர் வெளியூர் சென்றிருக்கும் போது அவருடைய தம்பி இஸ்வத்து நாச்சியாரை கெடுக்க முயற்சித்ததும், இஸ்வத்து நாச்சியார் தன் கற்பை காப்பாற்றுவதில் பட்ட கஷ்டங்களும், பின்தான் ஆண் உருவ மேற்றுக்கொண்டு செய்த நற் செயல்களும், கடைசியில் தனது கணவரைச் சேர்ந்ததும் மிகவும் விரிவாக விபரிக்கப்பட்டுள்ளன. இதை ஒவ்வொரு முஸ்லிமும், பெண்கள் குறிப்பாகவும் படித்தறிய வேண்டியதுஅவசியம்.

இதன் விலை நயா பை. 64

# கல்ஸர் நாமா

(இரண்டாம் பதிப்பு)

பாத்திமா நாயகியின் கல்ஸர் என்னும் ஆபரணத்தின் வரலாறு, இது உர்துவி லிருந்து சுத்தத் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது.

இதன் விலை நயா பைசா. 12
மேற்படி அரபுத் தமிழ் நயா பைசா. 20

# காஜா நிஜாமுத்தீன் அவ்லியா ஜீவிய சரித்திரம்

நம் பாரத தேசத்தின் தலை நகராகிய டில்லி (தெஹ்லீ) மாநகரத்தில் அடங்கியிருக்கும் சுல்தானுல் மஷாயிக், க்வாஜா, நிஜாமுத்தீன் அவ்லியா (குத்திஸ ஸிர்ருஹூ) அவர்களின் மகாத்மியம் மகத்தானது. முஸ்லிம்களும், முஸ்லிமல்லாதவர்களுங் கூட, ஆண்டுதோறும், நிஜாமுத்தீன் 'தர்காஹ்'வுக்கு விஜயம் செய்து நற்பயன் அடைந்து செல்கிறார்கள்.

இத்தகைய மகானின் பிறப்பு, படிப்பு, பயிற்சி, தியானம், வணக்கம், சத்திய போதனை, நற் பிரசாரம், போராட்டம், வெற்றி முதலிய விஷயங்கள் சுருக்கமாகவும் விளக்கமாகவுமுள்ள ஜீவிய சரித்திரம் இது. ஒவ்வொருவரும் படித்துணர வேண்டிய

இதன் விலை நயா பை. 0 – 52

ஞான நூல்.

# காஜா முயீனுத்தீன் சிஷ்தீ அஜ்மீரி (ரலி) அவர்களின் ஜீவிய சரித்திரம்

இதில் காஜா முயீனுத்தீன் சிஷ்தி (ரலி) அவர்கள் அவதரித்ததும், இளம் வயதிலேயே இபுறாஹீம் கந்தூஸி என்னும் மஹானை சந்தித்து அதனால் அவர்கள் மனம் மஃரிபத் ஒளிவால் நிறப்ப மடைந்ததும் பின்னர் காஜா உஸ்மான் ஹாரூனி (றஹ்) அவர்களிடம் சென்று உபதேசம் பெற்றதும் பின்பு மக்கத்துக்குச் சென்றதும், பின் பக்தாத் ஷரீப் வந்து ஹஸ்ரத் கவ்துல் அஃலம் (கத்த) அவர்கள் சமூகத்தி லிருந்ததும், பஷர்வார் நகருக்குப் போய் ஒரு துர்க்குணமுள்ள கொடியனை நல்வழியி லாக்கினதும், பின்பு பலக் எனும் ஊரில், தஸவ்வுப் என்னும் மெஞ்ஞானத்தில் விசுவாச மில்லாத ஒரு வைத்தியரின் உள்ளத்தில் மஃரிபத் என்னும் மெஞ்ஞான ஒளி பிரகாசிக்க செய்ததும், தீப்பூசகர்களை இஸ்லாத்திலாக்கினதும் காபிரான ஒரு கொள்ளைக் கூட்டத்தை இஸ்லாமைத் தழுவச் செய்ததும், பிறகு மதீனா ஷரீபுக்குப் போய் ஸியாரத்து செய்ததும், அங்கிருந்து நமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் உத்திரவுபடி அஜ்மீர் வந்ததும், அங்கே நடத்திய கராமத்துக்களும், அவர்களின் திருமணமும் அவ்லாதுகளும், அவர்கள் வபாத்தும் விபரிக்கப்பட்டுள்ளன. இம்மஹானின் சரிதையை ஒவ்வொருவரும் வாசித்

இதன் விலை ந பை. 52

தறிய வேண்டியது அத்தியாவசியம்.

மேற்படி அறபியில் காஜா முயீனுத்தின் சிஷ்தி அவர்களின் "அதாஹிர் ரஸூல்"

விலை ரூ. 1 – 32

என்னும் மௌலூது.

ஹீரத்துல் குப்று வென்னும்

# கதீஜா நாயகி (ரலி) ஜீவிய சரித்திரம்

இச்சரித்திரமானது எஜமானியாக ஏற்று பின்பற்றத்தக்க நாயகியான மஹா சங்கை பொருந்திய நபி பெருமாட்டியின் ஜீவவிருத்தாந்தமாகும். இம்மங்கையர் தமது வடிவாம்சங்களில் உலகப் பெண்கள் எல்லாரினும் மீக்குற்றவர் அன்றியும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டிகள் எல்லாரினும் பிரதமமானவர் என்ற பெருமை அவருக்கு வாய்ந்திருந்தது. அவரது வாழ்க்கை சம்மந்தமான இந்த சரித்திரம் அனைவரும் படித்து அனுஷ்டிக்கத்தக்கதா யிருக்கிறது.

இதில் கதீஜா நாயகியின் வமிச பரம்பரையும், முதற் கலியாணங்களும் அவர்களின் வர்த்தகச் செல்வமும், றஸூல் நாயகம் (ஸல்) ஷாம், மிஸ்ர் தேசங்களுக்கு யாத்திரை போய் வந்ததும், கதீஜா பெருமாட்டிக்கும் நபிகள் பெருமானாருக்கும் திருக் கலியாணம் முடிந்ததும் கதீஜா பெருமாட்டி தமது உரிமையைக் கணவருக்கு அர்ப்பணஞ்

செய்ததும், நபி பெருமானாருக்கு வஹீ இறங்குதல், நபிபட்டந் தரித்தல், நபிகள் பெருமானாருக்கு கதீஜா பெருமாட்டியின் உதவி, கதீஜா பெருமாட்டியின் மௌத் முதலியவைக ளடங்கி யிருக்கின்றன. இச்சரிதையில் நம் முஸ்லிம் சகோதர சகோதரிகளுக்கு அளவற்ற போதனைகள் நிறைந்திருக்கின்றன. கிளேஸ் காகிதம் இதன் விலை ரூ. 1 – 32

ஷை அறபுத் தமிழ் விலை ரூ. 2 – 12

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்
அவர்களின் அருமைப் புதல்வியாகிய

# பாத்திமா நாயகி (ரலி) ஜீவிய சரித்திரம்

இச்சரித்திரத்தில் ஹஜ்ரத் பாத்திமா நாயகி அவர்களின் மாதாவாகிய உம்முல் மூஃமினீன் கதீஜா நாயகி அவர்களின் வம்ச பரம்பரையும், அவர்களின் பிறப்பும், பாத்திமா நாயகியின் பிறப்பும், பால்யகால அறிவும், பரஸ்பர அன்பும், நாயகியின் திருக்கலியாணமும், அவர் தம் வீட்டில் குடித்தனம் நடத்தி வந்த ஒழுங்கும், தனது பர்த்தாவாகிய அலியாருக்கு இணங்கி நடந்த அழகும், அவர்களின் தயாள சிந்தையும், உழைப்பும், ஆண்டவன் மீது பக்தியும், வணக்கமும், கபூலாக்கப்பட்ட துஆவும், ரஸூலுல்லாவுக்கு பாத்திமா நாயகியின் பால் இருந்து வந்த அன்பும், நாயகிக்கு தம் தந்தையின் பால் இருந்து வந்த பிரியமும் அவர்களின் நாணம், அடக்கம், அச்சம் முதலிய ஒழுக்கங்களும், இமாம் ஹஸன் ஹுஸைன் றலியல்லாஹு அன்ஹுமா அவர்களின் மேம்பாடும், நாயகியின் வபாத்தும் விபரமாய்க் கூறப்பட்டிருப்பதுடன் இந்நாயகியின் ஜீவிய சரித்திரத்தில் நம் சகோதர சகோதரிகளுக்கு அரிய போதனைகளும் அடங்கி யிருக்கின்றன. ஒவ்வொரு முஸ்லிமும் இச்சரிதையை வாசித்துணர வேண்டியது மிக்க அவசியமாகும். கிளேஸ் காகிதம் இதன் விலை ரூ. 1 – 60

மேற்படி அறபுத் தமிழ் விலை ரூ. 3 – 00

# ஹஸ்ரத் ஆயிஷா நாயகி அவர்களின் ஜீவிய சரித்திரம்

ஆயிஷா நாயகியின் வம்சபரம்பரையும், குழந்தைபருவமும், கதீஜா நம்பிராட்டியாரின் வபாத்தும், ஆயிஷா நாயகியின் திருமணமும், மஹர் (விவாக கட்டணம்) விபரமும், நபி பெருமானார் ஹிஜ்றத்து செய்தல், ஆயிஷா நாயகி மதீனாவுக்குப் போதல், சீதனச் சாமான்களும், வலிமா விருந்தும், ஆயிஷா நாயகியின் குடித்தன ஆரம்பமும், பொம்மை விளையாட்டும், ஆயிஷா நாயகி பால் ரஸூலுல்லாவின் அன்பும், ஆயிஷா நாயகியின் செல்வாக்கும், நீதி நெறிகளும், சமத்துவமும் மேன்பாடும், கல்வித் திறமையும், பெருந்தன்மையும், தர்ம குணமும், உபசார நிலைமையும், ஆண்டவனிடத்து பயமும், வணக்கமும், தம் வீட்டுக்காரியங்களைத் தாமே செய்து கொள்ளும் குணமும், துப்புரவான சுபாவமும், கணவருக்குக் கீழ்படிந்து நடத்தலும், கோஷா நாகரீகமும், அணியும் உடையின் தன்மையும், ஸ்திரீகளுக்கு பைஅத்து கொடுத்தலும், ஆழ்ந்த கருத்தோடு பேசும் திருமொழிகளும், விபரமாய் கூறப்பட்டிருப்பதோடு முஸ்லிம் சகோதர சகோதரிகளுக்கு அளவற்ற போதனைகளும் குவிந்திருக்கின்றன.

கிளேஸ் காகிதம் விலை ரூ 1 – 56

மேற்படி அறபுத் தமிழ் விலை ரூ. 4 – 00

மேற்படி ஹஜ்றத் கதீஜா நாயகி, பாத்திமா நாயகி, ஆயிஷா நாயகி ஆக மூன்று நாயகிகளின் ஜீவிய சரித்திரம் ஒரே கட்டடம் கலிகோ பைண்டு ரூ. 4

மேற்படி 3 நாயகிகளின் ஜீவிய சரித்திரம் அரபுத் தமிழ் ரூ. 8

# ஹஜ்ரத் காஜா ஜுனைத்துல் பக்தாதி

## றலியல்லாஹு அன்ஹு அவர்களின் ஜீவிய சரித்திரம்.

அரும் பெரும் மெஞ்ஞான தத்துவங்களான தஸவ்வுப் தக்வா இபாதத் உப வாசம் என்ற இற்பானுடைய துறையில் துலங்கி விளங்கும் ஹஜ்றத் காஜா ஜுனைதுல் பக்தாதி றலியல்லாஹு அன்ஹு அவர்களின் அரிய ஜீவிய சரித்திரத்தைப் பார்க்க நம் நேயர்களில் அனைவரும் அளவிறந்த ஊக்கங் கொண்டிருக்கலாம் என்பதைச் சொல்லத் தேவையில்லை. ஹஸரத் அவர்களின் உஸ்தாதாகிய ஹஜ்றத் சரீயிஸ்ஸிக்தி றலியல்லாஹு அன்ஹு அவர்களின் அரிய மெஞ்ஞான உபதேசங்களை ஏற்று நடக்தொழுகிய ஹஜ்றத் காஜாஜுனைத் அவர்கள் உலக மெஞ்ஞானிகளுக்கோர் வழி காட்டிய தீபத்தைப் போலா வார். தமது திவ்விய உபதேசங்களினால் அந்தகாரத்தை தவிர்த்து மெஞ்ஞான ஒளிவீச செய்திருக்கிறார். தஸவ்வுபின் அபேக்ஷகர்கள் இவ்வரிய நூலை வாங்கி வாசித்து அம் மகானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி நடத்தல் அவசியம்.

கிளேஸ் காகிதம் விலை ரூ. 1 – 28

# கிபாயதுஸ் ஸாலிகீன் பீ தர்ஜுமத்தி ஹிகாயாதுஸ் ஸாலிஹீன்

இதுவாகிறது ஸாலிஹீன்க ளென்னும் மேன்மை தங்கிய ஸஹாபாக்கள் முதல் அவ்லியாக்கள் முதலான நாதாக்களின் ஹிக்காயத்துகள் என்னும் ஆகமத்தை பொதிந்தது. இதில் இருபது பாடங்கள் உண்டு. ஒவ்வொரு பாடத்திலும் பத்து பத்து ஹிக்காயத்து களாக 200 ஹிக்காயத்துகள் அமைந்திருக்கின்றன. இந்த ஹிக்காயத்துக்களைப் படிப் பதால் கல்பின் கறைநீங்கி, தெளிவு அதிகமாகிறது. ஸபற் ஸுஹது தவக்கல் ஸகாத்து முதலான நற்குணங்கள் குடிகொள்வதும் உண்டாகும்.

(அச்சாகிறது) கிளேஸ் காகிதம் கலிகோ பைண்டு விலை ரூ. 2 – 60

மேற்படி அறபுத் தமிழ் கலிகோ பைண்டு விலை ரூ. 3 – 28

# தஸ்கிறதுல் அவுலியா

(இதில் பதினேரு அவுலியாக்களுடைய சரித்திரங்க ளடங்கியிருக்கின்றன)

1-வது ஹஸரத் இமாம் ஜஃபறிஸ்ஸாதிக் றஹிமஹுல்லா, 2-வது ஹஸரத் உவைஸுல் கறனீ றஹிமஹுல்லா, 3-வது ஹஸரத் ஹஸன் பஸரி றஹிமஹுல்லா, 4-வது ஹஸரத் மாலிக்கிப்னு தீனர் றஹிமஹுல்லா, 5-வது ஹஸரத் முஹம்மது வாஸீஃ றஹிமஹுல்லா, 6-வது ஹஸரத் ஹபீபு அஜமி றஹிமஹுல்லா, 7-வது ஹஸரத் அபூ ஹாதிம் பகீர் றஹிமஹுல்லா, 8-வது ஹஸரத் அஹமதுப்னு குலாம் றஹிமஹுல்லா, 9-வது ஹஸரத் றூபியதுல் அதவிய்யா றஹிமஹுல்லா, 10-வது ஹஸரத் புலைலுப்னு இயால் றஹிமஹுல்லா, 11-வது ஹஸரத் இபுராஹீமுப்னு அத்ஹம் றஹிமஹுல்லா, ஆக இப்பதினேரு நாதாக்களுடைய சரித்திரங்கள் அடங்கிய நூல்.

கலிகோ பைண்டு விலை ரூ. 2–12

மேற்படி அறபுத் தமிழ் 1, 2, 3-பாகங்கள் ஒவ்வொரு பாகமும் விலை ரூ. 2–12

# தாரீகுல் குலபா

## இஸ்லாமிய கலீபாக்களின் அரசாங்க சரித்திரங்கள்

நமது இஸ்லாமிய கலீபாக்களின் சரித்திர விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டியது எல்லா முஸ்லிம்களுக்கும் அத்தியாவசியமான கடமையாகும். ஏனெனில்

இச்சரித்திரங்களில் இஸ்லாமின் ஆரம்பமும், இஸ்லாத்தை நிலை நாட்டிய தத்துவங்களும், இஸ்லாத்தின் பக்தி விசுவாசங்களும், இஸ்லாத்தின் சமத்துவங்களும், இஸ்லாத்தின் நீதி பரிபாலனங்களும் ஒருங்கே நிறைந்திருக்கின்றன. ஆதலின், இம்மகிமை பொருந்திய சரித்திரங்களை ஒவ்வொரு முஸ்லிமும் முஸ்லிம் அல்லாதாரும் அவசியம் வாசிக்க வேண்டும்.

இதில் முதல் பாகமாக நம் நபி பெருமானர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சரித்திரமும், முதல் கலீபாவாகிய ஹஸரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் சரித்திரமும் அடங்கியது. கிளேஸ் காகிதத்தில் கிரௌன் 8-பேஜ் ஸைஸில் அச்சிடப்பட்டு பைண்டு கட்டியது. விலை ரூ. 1 – 60

மேற்படி இரண்டாவது பாகம்- இதில் ஹஸரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் சரித்திரம் விரிவாய் எழுதப் பெற்றது. விலை. ரூ. 1-32

மேற்படி மூன்றும் பாகம்: இதில் ஹஸரத் உஸ்மான் (றலி) அவர்களின் கிலாபத்தும், ஹஸரத் அலி (றலி) அவர்களின் கிலாபத்தும், ஹஸரத் இமாம் ஹஸன் (றலி) அவர்களின் கிலாபத்தும், பனீ உமையாவின் கிலாபத்தும், அப்துல் மலிக் அவர்களின் கிலாபத்தும் ஆக 5-கிலாபத்து ஆட்சி வரலாறுகள் அடங்கியது. விலை ரூ. 1 – 32

ஷை மூன்று பாகமும் சேர்ந்தது விலை ரூ. 3 - 60

# திருச்சி ஹஸ்ரத் நத்ஹர் அவ்லியா அவர்களின் சரித்திரச் சுருக்கம்

இதில் ஹஜ்ரத் நத்ஹர் அவ்லியா அவர்கள் ஒரு அரச குமாரனுகயிருந்து தனது தந்தை காலஞ்சென்ற பின் தானே நீதி நெறியுடன் அரசு புரிந்து வரும் காலத்தில் ஓர் சொர்ப்பனங் கண்டதின் காரணமாக, சிம்மாசனத்தை விட்டு ஷய்க்கைத் தேடிச் சென்று, முரீது வாங்கியதும், பின்பு பிரயாணத்தில் தங்களுக்கு எதிராக வந்த அநேக பூதங்களை எதிர்த்து வென்றதும், பின் இலங்கைக்கு போய் ஆதம் (அலை) மலையில் ஹஸ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களைச் சந்தித்து, 'தப்லே ஆலம்' என்னும் பட்டத்தைப் பெற்ற பின் திருச்சி வந்ததும், அவர்கள் செய்த கருமத் அற்புதங்களும், அவர்களின் வபாத்தும் மிக விபாமாக விளக்கப்பட்டிருக்கிறது. இதன் விலை ரூ. 0–52

புதிய மூன்றும் பதிப்பு

# ஹஸ்ரத் நாகூர் மீரான் ஸாஹிபு ஆண்டவர்கள் காரண சரித்திரம்

இது ஹஸரத் ஸையிது அப்துல் காதிர் ஷாஹுல் ஹமீது மீரான் ஸாஹிபு ஆண்டவர்களின் ஜீவியமும், அவர்களின் அற்புதமாகிய கருமத்துகளும் ஒருங்கே நிறைந்தது. இது நேர்த்தியான காகிதத்தில் அச்சிடப்பட்டு அழகான பைண்டு செய்யப்பட்டது. விலை ரூ. 2–40

# ஹஸ்ரத் பிலால் (ரலி) ஜீவிய சரித்திரம்

ஹஸ்ரத் பிலால் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய காலத்தில் பாங்கு சொல்லும் முஅத்தின் வேலையில் ஈடுபட்டிருந்த சங்கதி சாதாரணமாய் எல்லா முஸ்லிம்களுக்கும் தெரிந்துள்ளதே. ஆனல் ஒரு ஹபஷ் தேச நீக்ரோ அடிமை, இஸ்லாம் மதக் கட்டளைகளுக்கிணங்க அல்லா ரஸூலுக்கு வழிபட்டு நடந்து கொண்டதினின்றும் அவருடைய

பதவியும், அந்தஸ்தும் எத்தகைய மேன்பாட்டை யடைந்தன வென்பதை அறிந்தோர் மிகவும் சிலரேயாவர்.

இவ்விபரங்களை யெல்லாம் இவ்வரிய சரித்திரத்தில் மிக விபரமாய் விளக்கிக் காட்டி எழுதலானோம். இதன் விலை ரூ. 0–64

# ஹஸ்ரத் ஷய்க் பூஅலி கலந்தர் அவர்களின் சரித்திர சுருக்கம்

இப்புஸ்தகத்தில் ஹஸ்ரத் ஷெய்க் பூஅலி கலந்தர் ஷர்புத்தீன் பாணிபத்தி (றஹ்) அவர்கள் பிறந்ததும், அவர்கள் நகர வாசத்தை வெறுத்து காடுகளிலும் மலைகளிலும் குகைகளிலும் போய் இறைவனது தியானத்தில் மூழ்கியதும் அவர்களுக்கு முர்ஷித் (குரு) ஹஸ்ரத் ஸெய்யிதினா ஆஷிக் குதா (ரஹ்) அவர்களின் தரிசனம் வாய்ப் பெற்றதும், அவர்களின் மகத்தான கருமத்துகளும், அவர்களின் வபாத்தும், அவர்கள் பேருக்கு ஓதப்படும் "ஸெஹ்மஸி பாத்திஹா" வின் விபரமும் அடங்கியுள்ளன. இதன் விலை ரூ. 0–28

# முஹ்யித்தீன் ஆண்டவர்கள் காரணச் சரித்திரம்

இது கல்விக் கடலாகிய இமாம் அப்துல்லாஹில் ஷாபிஈ றலியல்லாஹு அன்ஹு அவர்கள், அல்குத்துபுர் றப்பானீ வல்கவுதுஸ் ஸமதானீ ஸையிதினா முஹியித்தீன் அப்துல் காதிரில் ஜைலானீ றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய காரண சரித்திரங் களில் நின்றும் கஷ்பு கருமத்துகளில் நின்றும் அருமையும் அற்புதமான ஹிக்காயத்து களைக அறபியில் எழுதி யிருந்த கிதாபை, தமிழில் மொழி பெயர்த்து அரிய முறையில் வெளியிடப்பட்ட பெரிய நூலாகும். கலிகோ பைண்டு செய்யப்பட்டுள்ளது விலை ரூ. 3–00

மேற்படி அறபுத் தமிழ் "அல்கன்ஜுல் அப்கம் பீ மனாகிபுல் கவ்துல் அஃலம்" விலை ரூ. 8–00

அல் ஆரிபு பில்லாஹி காமில் ஒலியுல்லாஹ்

# ஹஸ்ரத் மவ்லானா றூமி அவர்களின் ஜீவிய சரித்திரம்

இந்நாயகம் மகா மேதாவிகளுக்கிடையில் புகழ் பெற்ற மெஞ்ஞான அருள் நிறைந்த நூலான மஸ்னவீ ஷரீபின் கிரந்தகர்த்தாவாவர். இந்நாயகத்தின் ஜீவிய சரித் திரத்தை ஒவ்வொரு முஸ்லிமும் அறிந்து அவர்களைப் பின்பற்றி நடந்து ஜெயம் பெறு வதற்கு உதவியான நூல். இதன் விலை ரூ. 1–00

# விறகு வெட்டியார் கிஸ்ஸா

(மூன்றாம் பதிப்பு)

இது உருதுவி லிருந்து சுத்தத் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. ஹஸ்ரத் இமாம் ஜாபர் ஸாதிக் (ரலி) அவர்களைப் பற்றிய ரிவாயத்து. இதில் ரஜப் மாதம் ஓதும் பாத்திஹாவின் காரணமும், வரலாறும் கூறப்பட்டிருக் கின்றன. இதன் விலை ரூ. 0–28

ஷை அரபுத் தமிழ் விலை ரூ. 0–32

## ஹஸ்ரத் ஷம்ஸ் தப்ரேஸ்அவர்களின் சரிதை

இதில் ஹஸ்ரத் ஷம்ஸ் தப்ரேஸ் அவர்களின் பிறப்பும் குழந்தை பருவமும், அவர்கள் மவ்லானு ரூம் அவர்களைச் சந்தித்ததும், இருவர்களுக்கு முள்ள சம்பந்தமும், ஹஸ்ரத் ஷம்ஸ் தப்ரேஸ் அவர்கள் கொலை யுண்டதும் விவரிக்கப்பட்டுள்ளது. அத்துடன் அவர்களின் குணாதிசயங்களும், அவர்களின் உபதேசங்களும் அடங்கியுள்ளன.
விலை ரூ. 0–64

———————

பாட்டுப்பத புஸ்தகங்கள்:—

## பன்னிரண்டு மாலை

இது கீழக்கரையி லடங்கி மறைந்திரா நின்ற மெஞ்ஞான சொரூப ராகிய காமிலொலி ஷெய்க் அப்துல் காதிர் லெப்பை ஆலிம் சாஹிபு அவர்களால் பாடப்பட்டது. இதில் தரீகத்து மாலை, ஹகீகத்து மாலை, மஃரிபத்து மாலை, தவ்ஹீது மாலை, சிர்று மாலை, திக்று மாலை, பிக்ரு மாலை, உஜூது மாலை, ஷுஹூது மாலை, அதபு மாலை, அறிவு மாலை, பயானுத்தீன் மாலை ஆக பன்னிரண்டு மாலைகள் சேர்ந்திருக்கின்றன.
சுத்தத் தமிழ் பதிப்பு. விலை ௲ பை. 52
மேற்படி அறபுத் தமிழ் விலை ௲ பை. 88

## பஞ்சரத்தின தாலாட்டு

இது 1-வது ஞானத் தாலாட்டு, 2-வது பாத்திமா நாயகத்தின் பேரில் சுகானந்தத் தாலாட்டு, 3-வது முஹியித்தீன் ஆண்டவர்கள் பேரில் மணிமந்திர தாலாட்டு, 4-வது ஷாஹுல் ஹமீது ஆண்டவர்கள் பேரில் மீரான் தாலாட்டு, 5-வது பாலர்களுக்கு வாழ்த்தக்கூடிய பாலர் தாலாட்டு ஆகிய 5 தாலாட்டுகள் சேர்த்து நேர்த்தியான காகிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது.
விலை ௲ பை. 20
அறபுத் தமிழ் விலை ௲ பை. 64

## மஜ்மூஅ முனாஜாத்து

சுத்த தமிழ்.

(மூன்றாம் பதிப்பு)

இந்த புஸ்தகத்தில் ஹக்கு பேரில் முனாஜாத்து, யாஸைய்யிதி மாலை, யாகுத்பா மாலை, தலை பாத்திஹா, ஸலவாத்துப் பாட்டு, முத்துமணி மாலை, பக்தி ஆனந்த பாத்தி முத்து மாலை, முஹியித்தீன் முனாஜாத், காஜாபந்தே நவாஸ் முனாஜாத்து, ஸரசுவதி மாலை, காஸீம் புலவர் இன்னிசை, கலியாண வாழ்த்துப் பதங்கள் ஆகிய இவைகள் சேர்ந்திருக்கின்றன.
இதன் விலை ௲ பை. 52
ஷை அரபுத் தமிழ் விலை ரூ. 1 – 28

## முதல்லல் கோஷா நாமா

கோஷா பர்தா விஷயத்தைப் பற்றி ஹக் தஆலாவின் கலாமாகிய தலீல்களிலும் நமது நபி நாயகமவர்களின் திரு மொழியாகிய ஹதீதுகளிலும் வந்திருப்பவைகளைக் கல்விக் கடல்களாகிய முஹத்திஸின்களும், முபஸ்ஸிரீன்களும், முஜ்தஹிதீன்களும்,

தெண்டித்து விபரித்தெழுதி யிருப்பவைகளில் சிலதை சுருக்கமாக சேகரித் தெழுதி முதல்லல் கோஷா நாமா வென்று பெயர் வைத்து தற்கால ஆலிம் மவ்லவிகளில் மஹான்களாகிய பத்து உலமாக்கள் பார்வையிட்டு அச்சிடப்பட்டது. இவைகளெல்லாம் வசனமாகக் கூறப்பட்டு இருக்கின்றன.

பின்பு இவைகளெல்லாம் சுலபமாக மனதில் வைத்துக் கொள்ளும் பொருட்டு பாடல்களாக போடப்பட்டு இருக்கின்றன.

இதன் விலை ரூ. 0–52

ஷை அறபுத் தமிழ் விலை ரூ. 0–80

# முனாஜாத்து மாலிகை

பன்னிரண்டு முனாஜாத்துகள் சேர்ந்திருக்கின்றன.

1-வது அல்லாஹு தஆலாவுடைய அஸ்மாவுல் ஹுஸ்னா வென்னும் தொண்ணூற்றொன்பது திருநாமங்களைக் கொண்டு கேட்கப்படும் முனாஜாத்தும் 2-வது ஹக் தஆலாவின் பேரில் அலிபுபே இருபத் தொன்பது ஹர்புகளை ஆரம்பமாக வைத்துப் பாடப்பட்ட முனாஜாத்தும், 3-வது றஸூலுல்லா பேரில் முனாஜாத்தும், 4-வது அலி றழியல்லாஹு அன்ஹு அவர்களின் பேரில் முனாஜாத்தும், 5-வது பாத்திமா நாயகி அவர்களின் பேரில் முனாஜாத்தும், 6-வது இமாம் ஹஸன் ஹுஸைன் (றலி) அவர்களின் பேரில் முனாஜாத்தும்; 7, 8-வது முஹியித்தீன் ஆண்டவர்கள் பேரில் முனாஜாத்தும், 9, 10-வது ஷாஹுல் ஹமீது ஆண்டவர்கள் பேரில் முனாஜாத்தும், 11-வது கல்வத்து நாயகம் ஒலியுல்லா அவர்கள் பேரில் முனாஜாத்து 12-வது கீழக்கரை ஷெய்கு ஷாஹுல் ஹமீது ஆலிம் அவர்கள் பேரில் முனாஜாத்தும் ஆக பன்னிரண்டு முனாஜாத்துகள் அடங்கிய அரிய நூல்.

இதன் விலை ந பை. 32

அறபுத் தமிழ் விலை ந பை. 64

# மெஞ்ஞான மனதலங்கார புகழ்ச்சி

இது மிகவும் சிறந்த ஓர் ஞான நூல்

மெஞ்ஞான அருள் நிறைந்த ஓர் வித்வானால் பாடப்பட்டது. இதற்கு பிரக்யாதி பெற்ற மகா வித்வான்களாலும், மேன்மை தங்கிய ஆலிம்களாலும் பல சாற்று கவிகள் கூறப்பட்டிருக்கின்றன. இதில் பல வகை துதிகளும், பதிகங்களும், சிந்துக்களும் இன்சானை ஹர்புகளால் உருவெடுத்த கோலப் படமும் பல மெட்டுகளில் மெஞ்ஞான கீர்த்தனைகளும் நிறைந்திருக்கின்றன.

விலை ரூ 1 – 80

(அடுத்த பதிப்பு அச்சாகிறது)

———————

## ஞானப் புத்தகங்கள்:—

குணங்குடி மஸ்தான் ஸாஹிபு ஒலியுல்லா அவர்கள்

# திருப்பாடல் திரட்டு

மூலமும் பொழிப்புரையும்

கடல்சூழ் புவியி லுளத்திருளைக்
கருணை யொளி யினாற் களைந்து
விடல்சூழ்பவரிற் குணங்குடியான் மிக்கோ
னெனற்கோற் றடையுளதோ

எனப் பெரியோர்களால் போற்றப்பட்ட குறைவற்ற நற்புகழ் பரமயோகி யென்னும் குணங்குடியாராகிய மஸ்தான் ஸாஹிபு ஒலி நாயகமவர்கள் தம் ஜீவ திசையில் அருளிச் செய்த திருப்பாடல் திரட்டுக்கு கல்வியிலும் மெஞ்ஞான அறிவிலும் சிறந்த மகாவித்து வானைக் கொண்டு உரை யெழுதப்பட்டும், அரபி சொற்களுக்கு ஆலிம்களைக் கொண்டு சூபியாக்களுடைய இஸ்திலாஹாத்தின்படி வியாக்யானம் எழுதப்பட்டு ஷை மஸ்தான் ஸாஹிபு பேரில் பல வித்வான்களால் பாடப்பட்ட தோத்திர பாக்களும் பொழிப்புரை களும் சேர்க்கப்பட்ட நூல் உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிட்டு அழகிய கலிகோ பைண்டு செய்யப்பட்டிருக்கின்றது.

பாடல் விலை ரூ. 2

மூலமும் உரையும் (அடுத்த பதிப்பு அச்சாகிறது) விலை ரூ. 6

குணங்குடி மஸ்தான் ஸாஹிபு மௌலூது அரபியில் விலை ந பை. 52

தக்கலை பீர் முஹம்மது ஒலியுல்லா அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய

# ஞானக் கோர்வை

இதில் மேற்படி ஒலி நாயகமவர்கள் அருளிய பிஸ்மில்குறம், ஞானப்பால் ஞானப் பூட்டு, ஞானப் புகழ்ச்சி, ஞான மணிமாலை, ஞானக்குறம், ஞானரத்தின குறவஞ்சி, ஞான ஆனந்தக் களிப்பு, திரு மெஞ்ஞான சரநூல், ஞான முச்சுடர்ப் பதிகம் முதலியன அடங்கி யிருக்கின்றன.

கலிகோ பைண்டு விலை ரூ. 3 – 80

# அரிதாய் வெளிவந்த ஞான உரைகள்

சுமார் முன்னூறு வருடங்களுக்கு முன் மலையாள மண்டலத்தைச் சார்ந்த தக்கலையில் வாழ்ந்திருந்து அநேக அற்புதங்களைக் காட்டிய மெஞ்ஞான சொரூபராகிய காமிலொலி ஹஜ்ரத் பீர் முஹம்மது ஸாஹிபு ஒலியுல்லா அவர்கள் திருவாய் மலர்ந் தருளிச் செய்த மெஞ்ஞானத் திருப்பாடல் மூலம் முழுமையும் உரை எழுதப்படாமல் பெருங்குறையா யிருந்ததினால் அக்குறையை நீக்கும் பொருட்டு அநேக மஹான்களின் ஞான ஆராய்ச்சியின் கருத்துகளைக் கொண்டும் மெஞ்ஞான அருள் நிறைந்த மஹா வித் வான்களைக் கொண்டும் உரை எழுதி தெளிவாய் அச்சிட்டு வெளியாக்கப்பட்டிருக்கிறது.

இந்நூலானது ஹகாயிகு மஃரிபாவின் விஷயங்களை நன்கு வரையறுத்துக் காட் டுவதோடும்; அஹது, உஹது, வாஹிது அதாவது அடி, முடி, நடு என்னும் உண்மை ஞானக் கருத்துகளையும், அதை அடையும் சாதனங்களான முரீது நாட்டம், தேட்டம், வாசியேற்றம், இரக்கம், கல்வத்து, தவம், சாதனை முதலிய வழிபாடுகளையும் துலக்கமாய் எடுத்துக் காட்டும்.

| | |
|---|---|
| பிஸ்மில் குறம் ஞானவிளக்கவுரை | விலை ரூ. 1 – 96 |
| ஞானமணி மாலை தாத்பரிய உரையும் ஆசிரியரின் ஜீவிப சரித்திரமும் அடங்கியது கிளேஸ் காகிதம் (அடுத்த பதிப்பு அச்சாகிறது) | விலை ரூ. 1 – 96 |
| ஞானரத்தின குறவஞ்சி உரையுடன் கிளேஸ் காகிதம் | விலை ரூ. 1 – 96 |
| மஃரிபத் மாலை பொழிப்புரை கலிகோ பைண்டு | விலை ரூ. 2 – 56 |
| ஞான முச்சுடர் பதிகம் (அவதாரிக உரை) | விலை ரூ. 1 – 56 |
| ஞானக் குறம் பகுத்தறிவுரை | விலை ரூ. 1 – 28 |
| ஞானப் பால் அகமிய உரை, ஞானப்பூட்டு திரவுகோலுரை ஆப்பைண்டு | விலை ரூ. 1 – 00 |
| ஞான ஒப்பாரி திரு கட்டளை உரை கருவூரார் பூஜாவிதி தீர்ச்சி உரை ஆப் பைண்டு | விலை ரூ. 1 – 00 |

மகா மெஞ்ஞான சொரூபராகிய ஹஜ்ரத்
பீர் முஹம்மது ஸாஹிபு ஒலியுல்லா அவர்கள் பாடிய

# ஞானமணி மாலையும் தாத்பரிய உரையும்

அவர்களின் ஜீவிய சரித்திரமும் வெளி வந்திருக்கின்றன.

ஞானமணி மாலை என்னும் தவ்ஹீதின் நூலுக்கு அநேக நூற்றூண்டு களாக உரை செய்யாமல் இருந்து வந்தது மிகக் குறையாக இருந்தது. அநேக பெரியோர்களின் ஆராய்ச்சியைக் கொண்டும் உயர்தரபல கிரந்தங்களைக் கொண்டும் மேற்படி ஒலியுல்லா அவர்களின் ஜீவிய சரித்திரமும் அத்துடன் தாத்பரிய உரையும் எழுதுவித்து உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் முத்து போன்ற அட்சரத்தில் சுத்தமாகவும் வெகு நைஸாகவும் அச்சிட்டு உயர்ந்த பைண்டுடன் வெளியிடப்பட்டிருக்கிறது.

| | |
|---|---|
| (அடுத்த பதிப்பு அச்சாகிறது) கிளேஸ் ஆப் பைண்டு | விலை ரூ. 1 – 96 |
| ஷை பாடல் மாத்திரம் | விலை ரூ. 0 – 40 |
| ஷை அறபுத் தமிழ் (பாடல்) | விலை ரூ. 0 – 80 |

# முரீது உபதேசம்

இதில் அடங்கியுள்ள விஷயங்களாவன:—உண்மை பக்கிர்கள் யார்? இராதத்—முரீத்—முருதத் விபரம், முரீத் தென்பவர் யார்? தஸவ்வுப் விபரம், முரீதின் ஆரம்ப நிலை, ஷேக் சன்னிதானத்தில் முரீதின் மரியாதை, முரீதுக்கு ஷைக் ஆதரவு, சமா என்னும் புகழ் பாடக் கச்சேரி விபரம், முரீதுக்கு பீர்ஸாஹிபிடம் இருக்க வேண்டிய பயபக்தி, முரீதுக்கு ஷைக் ஸாஹிபின் உபதேசப் பயிற்சி விதம், சகோதர வாஞ்சையும் ஏனைய பழக்க உபசாரங்களும், அந்நியர் சேர்க்கை, செல்வந்தர் சேர்க்கை, பகீர்களுடன் சேர்க்கை வைத்தல், பகிர் ஸாஹிபின் எளிமைச் சிறப்பு, பகீரும் சுவால் செய்தலும், பகீர் சுகானுபவ ஒழுக்கம், பகீர் சாப்பாட்டு ஒழுக்கங்கள், தோழருடன் உபசார முறை, பிள்ளை குட்டிகளுடன் பகீரின் பழக்காசார முறை, பிரயாணத்தில் பகிர்கள் எவ்வாறு ஒழுக வேண்டும், பகிர் ஸாஹிபு இராகம் செவியுறுதல், முஜாஹிதா (தவப்பர யுத்தம்) விபரம், முஜாஹிதாவின் தாத்பரியம், முஜாஹிதாவை பூர்த்திக்கும் அம்சங்கள், ஆண்டவன் மஃரிபத், ஷைத்தானைப் பற்றிய எச்சரிக்கை, நப்ஸ் எச்சரிக்கை, ஆண்டவன் பயபக்தி, மஹான்களின் பழக்க ஆசாரங்கள், தவக்கல் என்னும் நம்பிக்கை, நற்குண சீலங்கள், ஆண்டவன் சந்நிதானத்தில் நன்னடத்தை, ஷுக்ரு (நன்றி) விபரம், ஸப்று விளக்கம், ரிஜா (சம்மதம்) உண்மை விளக்கம், பரிசுத்தம், தௌபாச் செய்தல், இராக்கால வணக்கம், நபி பெருமானரின் இராத் தொழுகை, தனிமையில் உபதேசித்தல், உபதேச ஷரத்துகள், நப்ஸும் ஆத்மாவும், தங்கள் ரியாஜத், குத்பு நாயகத்தின் துஆ, மதக் கல்வி முதலியவைகளை விரிவாய் விவரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு முஸ்லிமும் இப்புத்தகத்தை வாங்கி படித்து பிரயோஜன மடைவது அத்தியாவசியம்.

இதன் விலை ரூ. 1 – 52

தமிழில் இதுகாறும் வெளிவராத

# முஸ்லிம் அத்வைத மூல மொழி

அது அரபி, பார்ஸி பாஷைகளி லிருந்து நெல்லிக் குப்பம் மௌல்வி முஹம்மது அப்துல் றஹ்மான் ஸாஹிபவர்கள் தமிழில் உரை படுத்தப்பட்ட அருமையான இஸ்லாமிய அத்துவைத நூல்.

இதில் இஸ்லாமிய மூலமந்திரமாகிய "லாஇலாஹ இல்லல்லாஹு" என்னும் கலிமாவின் பொருளை, உள்ளது உள்ளபடி விளக்கிக் காட்டி அல்லாஹு தஆலா சர்வமும் தானயிருக்கிறுன் என்ற சத்தியத்தை நிலை நாட்டி அதற்கு ஆதாரமாக ஆயத்துகளும் ஹதீதுகளுமாகிய சுருதிப் பிரமாணங்களையும் எடுத்துத் தீட்டியிருக்கிறுர். அத்துவைதமே தெரியாத சாமானிய படிப்பாளிகள் கூட இதை வாசிக்கத் தொடங்கினல் இதன் உண்மைதானென்ன வென்று தெரிந்து கொள்வர்.

இந்நாலுடன் "துஹ்பத்துல் முர்ஸலா" என்கிற ஓர் அரிய அத்வைத நூலும், "இந்துமத வேதாந்தப் பகுதி" என்ற ஓர் நூலும் ஆக மூன்றும் சேர்த்து ஒரே பைண்டு செய்யப்பட்டிருக்கிறது. (அடுத்தபதிப்பு அச்சாகிறது) விலை ரூ 1 – 80

# வேதப்புராணம் ஞான பொழிப்புரை

300–வருடங்களுக்கு முன் காயற்பட்டணத்தில் அவதாரஞ் செய்தெழுந்தருளிய மெய்ஞ்ஞான சொரூபரான மஹான் ஷெய்குல் இஸ்லாம் அல்ஆரிபு பெரிய நூஹ் லெப்பை ஆலிம் அவர்கள் பாடிய தெய்வத் திருமொழி சூத்திர சொர்ண மேருவான திருக் குர்ஆன் ஷரீபின் ஞானத்தேன் கூண்டை அப்படியே எடுத்துப் பிழிந்து வார்த்தவண்ணமாக, கவிதாமாரி சொரிந்த வேதப் புராணம் என்னும் காவியத்துக்கு ஞானபொழிப்புரை செய்து வெளியிட்டு இருக்கின்றேம்.

1-ம் பாகம் (அச்சாகிறது) விலை ரூ. 2 – 56
ஷை 2–ம் பாகம் விலை ரூ. 2 – 20

---

**நாவல்கள்;—**

# இரத்தச் சின்னம்

இது திடுக்கிடும் சம்பவங்கள் நிறைந்த ஒரு துப்பறியும் நாவல்

சிரச்சேதம் செய்யப்படுவதினின்று சீர்கெட்ட குற்றவாளி யொருவன் தற்செயலாகத் தப்பிப் பிழைத்திராவிடில், இரத்தச் சின்னம் என்னும் இரகசியக்குழு இயங்கத் துவங்கி இராது. நீதி பரிபாலனத்தில் பரிதவிக்கத் தக்க முறையில் நிகழ்ந்த இந்த அசம்பா விதத்துக்குச் சில வருடங்களுக்குப் பிறகு இரக்க சிந்தையற்றவனெருவன் இங்கிலாந்தில் இரகசிய நடவடிக்கைகளில் ஈடுபடலானுன். தீர்க்க ஆலோசித்து திட்டமிட்டுத் திறமையோடும் தீரத் தோடும் செயலாற்றுவதன் மூலம் தனக்கு உதவியாளர்களாக ஏராளமான ஆட்களைச் சேகரித்துக் கொண்டான் அவன். ஒருவருக்கொருவர் பரஸ்பர பழக்க மில்லாமலும் அறிமுக மில்லாமலும் அதியற்புதச் செயல்கள் புரிந்த இந்த இரகசியக் குழுவிற்குத் தலைமை தாங்கிய மர்ம மனிதன் இரத்தச் சின்னம் என்று கையெழுத்திட்டான்.

அவனின் மர்ம இரகசியத்தைக் கண்டு பிடித்தல் மிக ஆச்சரியமானது.

இதன் விலை ரூ. 1–28

# ஔரங்கஸீப்

இது டில்லி மன்னர் ஷாஜஹான் சக்ரவர்த்தியின் புத்திர சிகாமணியாகிய ஔரங்கஸீப்பின் சரித்திர வரலாறு. இவர் நமது இந்திய அரசரான படியால் இவருடைய சரிதையை ஒவ்வொருவரும் படித்தறிய வேண்டியது அவசியம். விலை ரூ. 1-56

# பாஸோவின்மர்மம்

இது ஒரு அருமையான துப்பறியும் கதை. இதில் ஒரு பாங்கை மோசம் செய்ய சிலர் எத்தனித்ததையும் அது கைகூடா வண்ணம் செய்து அவர்களின்

திருட்டு யோசனைகளை வெளியாக்கிய துப்பறியும் ஷம்ஸின் செயல்களும் விளக்கப்பட்டுள்ளது.

இதன் விலை ரூ. 0–52

# மாயமாய் மறைந்த மங்கை

இது ஓர் அருமையான துப்பறியும் நாவல், திடுக்கிடும் சம்பவங்கள் நிறைந்துள்ளது. இதில் ஒரு பெரிய பணக்காரன் விரோதிகளுக்குப் பயந்து தனக்கு ஆபத்து ஏதும் வாராமலிருக்க, பெயர் பெற்ற துப்பறியும் ஷம்ஸின் உதவியை நாட, ஷம்ஸ் ஷி வேலையின் நிமித்தம் அனுப்பிய ஏஜெண்ட் கொலையுண்டு, அந்தப் பணக்காரரும் காணமற்போய் விடுகின்றார். இதை ஷம்ஸ் விசாரிக்க செல்ல, அங்கு ஒரு மாசற்ற மங்கை மாயமாய் மறைந்த மர்மத்தையும், ஷம்ஸ் தனது அஸிஸ்டெண்ட் சோடேவின் உதவியினால் சிறிதும் அஞ்சாமல் கொலைக் கூட்டத்தினடுவே துணிந்து சென்று மர்மங்களைக் கண்டு பிடித்து விளக்குகின்றார். இதைப் படிக்க ஆரம்பஞ் செய்வோர் கதை முழுவதையும் முடிக்காமல் புத்தகத்தை கீழ் வைக்க மாட்டார் என்பதில் ஐயமில்லை.

இதன் விலை ரூ. 0–52

# லண்டன் சாமார்த்தியத் திருடர்கள்

(முதற் பாகம்)

இதிலுள்ள ஒவ்வொரு கதைகளும் படிக்கப் படிக்க ஆனந்தமா யிருக்கும் லண்டன் திருடர்கள் மகா சாமர்த்தியமாகச் செய்யும் பற்பல வித மோசங்களும், அந்த மோசங்களைப் பற்பல விதமான உபாயங்களால் கண்டு பிடிக்கும் ஹண்டர் (Hunter) என்னும் ஒரு போலீஸ் வீரனது புத்திசாலித் தனமும் இந்நூலில் மிக அருமையாக விளக்கப்பட்டிருக்கின்றது. இந்நூலைப் படிப்பதால் ஒவ்வொருவரும் கொலை களவு முதலிய மோசங்களைக் கண்டு பிடிப்பதற்கான பல உபாயங்களை அறிந்து கொள்ளலாம். மேலும், ஒரு மனிதனைக் கண்டவுடன் அவன் எப்படிப்பட்டவன்? என்ன தொழிலையுடையவன்? என்ன குணமுடையவன்? என்பதை அறிந்து கொள்ளும் வழிகளும் இதில் கூறப்பட்டிருக்கின்றது.

இந்நூல் யாவருக்குமே பயன்படக் கூடியதாகும். முக்கியமாய் போலீஸ் உத்தியோகத்தி லுள்ளவர்களுக்கு பெரிதும் பயன்படக் கூடியதாய் இருக்கும். சுருங்கச் சொல்லின் இந்நூலைப் படிக்க ஆரம்பித்தால் முழுவதும் படித்து முடிக்கும் வரையில் இடையில் நிறுத்த மனம் வராது

முதற் பாகம் விலை ரூ. 2–00

ஷை இரண்டாம் பாகம் (அடுத்தப் பதிப்பு அச்சாகிறது) விலை ரூ. 2–20

# லைலா மஜ்னூன்

அரபு தேச சர்தாருடைய அருமைக் குமாரனாகிய மஜ்னூ னென்னும் வாலிபன், அழகில் சிறந்த லைலா என்னும் ஒரு பெண்ணரசி பேரில் காதல் கொண்டு, ஒருவரையொருவர் நேசித்து பல துன்பங்களுக்கு இலக்காகி, இறுதியில் சந்திக்கும் வரை நடந்துள்ள சரிதை இது. இது உர்து பாஷையில் லைலீ மஜ்னூ னென்னும்பெயர் பெற்ற காவியமாகவிளங்கி வந்ததை தமிழ் பாஷையில் மொழி பெயர்த்து அருமையான நாவலைப் போல் வசன ரூபமாய் அமைக்கப் பட்டிருக்கின்றது.

விலை ரூ. 1–28

# வல்லப நாச்சியார்

இது துப்பறியும் ஓர் இனிய நாவல். படிக்கப் படிக்க மிக ருசிகரத்தையும் ஆனந்தத்தையும் கொடுக்கக்கூடிய அழகிய கதை.

விலை ரூ. 1–56

# ஹஸன்பே சரித்திரம்

## இது மிக இனிமையான ஓர் அற்புத தமிழ் நாவல்

எகிப்து என்னும் மிஸர் தேசத்து அரச குமாரனாகிய ஹஸன்பே என்னும் ஓர் சிறுவனின் சரிதை. இதில் ஆரம்பத்தில் கிலேசமும் ஆச்சரியமும் நடுவில் சாமர்த்தியமும் முடிவில் பேரானந்தமும் நிறைந்தது. இன்ன தென்று சொல்ல முடியாத ரகசியங்களைக் காண்பீர்கள். படிக்க ஆரம்பித்தால் கதையை முடிக்காமல் நிறுத்த முடியாது.

(அடுத்த பதிப்பு அச்சாகிறது)

விலை ரூ. 1–52

# ஹுர்முஜ் கதை

## ஓர் இனிய தமிழ் நாவல்

ரோமாபுரியில் மனுநீதி வழுவாது நியாய பரிபாலனஞ் செய்து சிறந்து விளங்கிய அலக்ஜாண்டர் சக்ரவர்த்தியின் தவப்புத்திர ரத்தினமாகிய ஹுர்முஜ் இளவரசருடையவும், கூஜான் தேசத்தரசரின் புத்திரி அழகிற் சிறந்த "குல்" (புஷ்பம்) என்னும் இளவரசியினதும் சரித்திர அலங்காரத்தை பதிற்றாண்டுகளின் முன்னர் உருது, ஹிந்தி பாஷையில் புத்தகமாக்கப் பட்டிருந்ததை தமிழ் நாட்டாரும் அறிந்தானந்திக்குமாறு, தமிழில் மொழி பெயர்த்து "ஹுர்முஜ்" என்னும் நாமம் சூட்டப்பட்டிருக்கிறது.

இச்சரிதம், எப்புத்திமானையும் தன்னில் கவரச் செய்யும் இயல்பினை யுடையது. இதன் சிலபாகம் காதலர்களின் காதலையும், பெண் மணிகளாகிய கண்மணிகளுக்கு முக்கியமாய் வேண்டிய கற்புடைமையும் வரையறுத்துப் போதிக்கும். சில பாகம் போர்த்திறத்தைப் பூட்டும், சில பாகம் தளரா முயற்சி பலன் தருமென்பதை ஸ்திரப்படுத்தும், சில பாகம் பில்லி சூனியப் பீடறுக்கும் வழியைக் காட்டும், சில பாகம் தந்திரோபாயத்தையும் சமயத்தருவாயில் பிரயோகிக்க வேண்டிய சாமார்த்தியத்தையும் கற்பிக்கும். சில பாகம் துன்புற்றவன் இன்புறுவா னென்பதை யெடுத்துக் காட்டும்.

விலை ரூ. 2–28

---

**வைத்திய புத்தகங்கள்:—**

# யூனானி வைத்திய முறைகள்

## இரண்டாம் பதிப்பு

(தமிழில்)

இந்த புஸ்தகம் பல உர்து கிதாபுகளி லிருந்து சேகரிக்கப்பட்டு தமிழில் மொழி பெயர்த்து எழுதப்பட்டது.

இதில் மனிதனுக்கு வரக்கூடிய நோய்களை பல தலைப்புகளுக்கு அடியில் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு தலைப்புக்கும் அடியில் வரும் அநேக நோய்களுக்கும் பலவித மருந்துகள் கூறப்பட்டு இருக்கின்றன. இந்த மருந்துகள் நமது வீட்டிலேயே சொற்ப செலவில் தயாரித்துக் கொள்ளக் கூடியவைகள். இதில் கூறப்பட்ட தலைப்புகள்:—

சிரசு சம்பந்தப்பட்ட நோய்கள், சரீர சம்பந்தப்பட்ட நோய்கள், தாது சம்பந்தப்பட்ட நோய்கள், பல்வேறு விஷங்களுக்கு பல்வேறு சிகிச்சைகள், மூலத்திற்கு பல்வேறு பாகங்கள், கழுத்து சம்பந்தப்பட்ட நோய்கள், காச சம்பந்தப்பட்ட நோய்கள், தோல் சம்பந்தப்பட்ட நோய்கள், பல்வேறு நோய்கள்.

இதில் குறிக்கப்பட்ட எல்லா நோய்களுக்கும் மருந்துகள் சொல்லப் பட்டிருக்கின்றன. சில விடங்களில் ஒரே நோய்க்கு சுமார் 40, 50 மருந்துகள் வரை விவரிக்கப் பட்டு இருக்கின்றன.

இதில் உள்ள விஷயங்களுள் சில:—

அக்ரோட், அடிபட்ட நோய்களுக்கு, அதிக சம்போகம், அந்திமாலை, அபாபீலை, அபினி பழக்கத்தை அகற்ற, அம்மைக்குரிய சிகிட்சை, அரிசி திப்பிலி, அரைத் தலைவலி, அவயவங்களில் உண்டாகும் வலி, நடுக்கம், வாதம் முதலியவைகளுக்கு, அன்னாசி பழத்தின் ஷர்பத்து, ஆகாரம் ஜீரணம் ஆக, ஆடாதொடை, ஆமணக்குஞ் செடி, ஆமையின் பித்தம், இஞ்சி ஜவாரிஷ், இடுப்பு வலிக்கு, இத்ரீபல் கபீர், இத்ரீபல் கஸ்னீஸி, இரத்த பேதிக்கு, இருமல், இரைப்பை நோய்களுக்கு, ஈளை இருமல், ஈறு களில் சீழ் வருதல், ஈறு வீக்கம், உரோமங்கள் கொட்டிப்போனால், உரோமங்களைக் கறுப் பாக்கும், உள்ளங்கையில் தோல் உரிதல், தடித்தல், உஸ்தகுத்தூஸ், எட்டிக்கொட்டைஉட் கொள்ளும் விதம், எப்போது தண்ணீர் குடித்தல் கூடாது? எரிச்சலுக்கு, எருக்கஞ் செடி, எலி கடிக்கு, எலி புழுக்கை, எலுமிச்சம் ஷர்பத், எள்ளு, ஒமட்டலை நீக்க, ஓமம் ஜவாரிஷ், ஓரிலைத்தாமரை.

கக்கத்தின் நாற்றத்திற்கு, கட்டியை பழுக்க வைக்க, கண் சிவப்புக்கும் எரிச் சலுக்கும், கண்ட மாலை, கண் நோய், கண் பார்வை சக்தி, கண் புழுக்கல், கந்தகத் தைலம், கபம் நிவர்த்தி, கபஜுரத்திற்கு, கரிய போளம், கருஞ்சீரகம் ஜவாரிஷ், கருந் தேமலுக்கு, கர்ப்பம் தரிக்க, கர்ப்பம் தரிக்காதிருக்க, கலைமான் கொம்பு, கழுத்து சம்பந்தப்பட்ட நோய், காச சம்பந்தப்பட்ட நோய், காதில் கிருமி நீக்க, காதில் பூச்சி விழுதலுக்கு, காதுக்குள்ளி ருந்து புண் சீழ் வருதல், காது நோய், காது மந்தம், காயங்களை ஆற்ற ரணக்களிம்பு, காய்ச்சல், கிருகிருப்புக்கு, குடலைமிருதுவாக்கும், குடல் வேக்காட்டிற்கு, குரங்கு கடிக்கு, குழந்தைகளின் பக்கசூல வலிகளுக்கு, குழந்தைகளின் கிருமி உபத்திரவத் திற்கு, குழந்தைகளின் சுவாச நோய்க்கு, குழந்தைகளின் வயிற்றுப் போக்கிற்கு, குழந்தைகளுக்கு பச்சை நிறமாய் வெளிக்குப் போவது, குழந்தைகள் தூக்கத்தில் பயப்படா திருக்க, குளவி விஷத்திற்கு, குன்றிப்போன கண் பார்வைக்கு, குஷ்டத்திற்கு, கை, கால் வெடிப்பிற்கு, கொசு உபத்திரவத்திற்கு.

சளி, சம்போகம், சரீர சம்பந்தப்பட்ட நோய், சரீரத்தை தடிப்பாக்க, சரீரத்தை மெல்லியதாக்க, சலாசய நோக்கு, சிரங்கிற்கு, சிறுவர் வயிற்று சிக்கல் நீங்க, சீதத் தினால் உண்டாகும் வலிக்கு, சீதபேதி, சீதள தேகத் தோரின் வெட்டை நோய் தீர, சீதளம் வலிகளை நிவர்த்திக்க, சுவாச காசம், சுளுக்கிற்கு, சூதகக் காலங்களில் ஏற்படும் வலிக்கு, சூதகத் தடை நிவர்த்தி, சூலக்கட்டு, சொரி சிரங்கிற்கு, சோர்வுக்கு சிகிச்சை, தலை காயம் கொப்புளம் சிரங்கு, புண்களுக்கு, தலைமயக்கம், தலையின் பேன் நீங்க, தலைவலிக்கு, தாகத்தை அடக்க, தாது சம்பந்தப்பட்ட நோய், தாது நஷ்டம், தாது நஷ்டத்தால் ஏற்படும் நரம்பின் சோர்வுக்கு, தாது புஷ்டிக்கு, தாது விர்த்திக்கு, தாய்க்குப் பாலை குறைக்க, தாய்க்குப் பால் அதிகரிக்க, தீப்பட்டு வெந்து போனால், துடை சிறங்கிற்கு, துடைவலி, தும்பலுக்கு, துர்நாற்றமுள்ள புண்ணுக்கு, தேமலுக்கு, தேள் கடிக்கு, தேள் கொடிக்கி,

தொண்டைக்கம்மலை நீக்கும், தோல் சம்பந்தப்பட்ட நோய், தோல் வெடிப் பிற்கு, நகரோகம், நடுக்கு ஜுரத்திற்கு, நரம்புகளுக்கு சக்தி யுண்டு பண்ணும், நரம்பு சிலந்திக்கு, நாக்கு பூச்சிகளுக்கு, நித்திரை வராதிருக்க, நித்திரை வருவதற்கு, நீர் தடைப்பட்டுப் போனால் பிரிக்க, நீரில் இரத்தம் வருவதற்கு, நீரிழிவு ரோகத்திற்கு, நெஞ்சுவலி, நெருப்புப்பட்டு வெந்து போனால், பசியெடுக்க, பல் ஆடுவதைக் கெட்டிப் படுத்தல், பல் இரத்தம், பல் நோய், பல்பூச்சி நீக்கல், பாம்பு கடிக்கு, பாலர்களின் தாக வரட்சிக்கு, பாலர்களுக்கு பல் முளைக்கும் போது வெளிக்குப் போவதற்கு, பாலர் விக்க லுக்கு, பித்தஜுரத்திற்கு, பிரசவத்திற்கு பின் ஏற்படும் வலி நிவர்த்தி, புண்ணுக்கு, பேன் நீங்க, மர்மஸ்தான புண்ணுக்கு, மர்மஸ்தான விரிவை ஒடுக்க, மலச்சிக்கலை

நீக்கும், மலடு ஆணிலா பெண்ணிலா என்று அறிய, மலப் போக்கை நிறுத்த, மறதி மனச்சோர்வுக்கு, மனத்துடிப்புக்கு, மனித எலும்பு.

மாதர்களின் மர்மஸ்தான விரிவை ஒடுக்க, மார்பு தளராதிருக்க, முகத்தில் தோன்றும் கருந்தேமலுக்கு, முகப்பருவுகளுக்கு, முகவீக்கத்திற்கு, முதுகுவலி, முறைக் காய்ச்சலுக்கு, மூக்கின் துர்நாற்றத்திற்கு, மூக்கின் வரட்சிக்கு மூக்கு இரத்தத்திற்கு, மூச்சுப் பிடிப்பு, மூலத்திற்கு, மூளைக்கு வலிமை, யாருடன் சம்போகம் கூடாது? வசாவி, வண்டு கடி, வயிற்றின் வாயுவை நீக்கும், வயிற்றுக் கட்டி, வயிற்றுப்புசம் நீங்கும், வயிற்றுப் பூச்சி கிருமிகளுக்கு, வயிற்று வலிக்கு பூச்சு வலி வீக்கத்திற்கு, வாகை வாதத்தால் வாய் கோணிப் போவதற்கு, வாதத்தை கேட்கும், வாந்தி பேதி, வாயு அஜீரணம் நிவர்த்தி, வாயு நிவர்த்தி, வாயுவலி, வாதம் வாயு, வாதம் வாயுவைக் கண்டிக்கும், வாய் நாற்றத்தைப் போக்க.

விக்கலுக்கு, வியர்வைக்கு, வியர்வை நாற்றத்தைப் போக்க, விரைகளின் மேல் உண்டாகும் காயங்களுக்கு, விரை வாயுவுக்கு, விரை வீக்கத்திற்கு, விலா பக்கவலி, விஷக்கடிக்கு, விஷம் அருந்தினவனுக்கு, வெடிப்பிற்கு, வெட்டை நோய்க்கு, வெண் சிட்டை, வெண் குஷ்டம், வெந்து போன காயங்களுக்கு, வெள்ளை வெட்டைக்கு, வெறி நாய் கடிக்கு, வேக்குருக்கு, ஜலதோஷத்திற்கு, ஜீரண சக்தியை உண்டாக்கும், ஜுரத்திற்கு, ஸ்கலிதத்தை தடுக்க, ஸ்கலிதமாவதற்கு முதலியவை.

இந்த புஸ்தகம் ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டியது என்று சொல்ல அவசியம் இல்லை. 282-பக்கங்களைக் கொண்டது. கலிகோ பைண்டு செய்யப்பட்டது.

இதன் விலை ரூ. 3–00

---

## மாந்திரீக ஜால புத்தகங்கள்:—

# மாஜிக் என்னும் ஜால வித்தை

மாஜிக், அல்லது ஜாலவித்தை செய்ய விரும்புகிறவர்கள், இந்த புஸ்தகத்தை உபயோகப் படுத்தலாம். இதில் அடங்கியுள்ள வித்தைகள்:—கைகுட்டையைக் கிழியச் செய்து, மறுபடியும் ஒன்றாக ஆகச் செய்வது; எரியச் செய்வது, சாம்பலை கைக்குட்டையாக மறுபடியும் ஆக்குவது; வெறும் கையிலிருந்து கைக்குட்டையை வரச் செய்வது, வெள்ளைக் குட்டைக்குப்பின் இரண்டு கைகுட்டைகளை வரச் செய்வது, எல்லா கைகுட்டைகளையும் மறையச் செய்வது, மறுபடியும் எல்லா கைக்குட்டைகளையும் வரச்செய்வது, தனியாக ஒரு கைகுட்டையை கையிலிருந்து மறையச் செய்வது, கைகுட்டையின் நிறங்களை மாற்றுவது, கைகுட்டையை பில்லியர்டு பந்தாக மாற்றுவது, பில்லியர்டு பந்தை ஒரு கண்ணாடி தண்ணீர் டம்ளரில் மறையச் செய்வது, பந்தின் எண்ணிக்கைகளை அதிகப்படுத்துவது, பந்தின் நிறத்தை மாற்றுவது, சீட்டுக்கட்டிலிருந்து நினைத்த சீட்டைதானேமேலே எழும்பச் செய்வது, பூச்செண்டிலிருந்து நினைத்த சீட்டை எழும்ப செய்வது, நினைத்த சீட்டை புட்டிக்குமேலே தானே வரச் செய்வது, துப்பாக்கியால் நினைத்த சீட்டை கைகுட்டையில் ஒட்டச் செய்வது, மனதில் உள்ள சீட்டை வேறிடத்தில் வெளிவரச் செய்வது, சீசாவிலிருந்து நினைத்த கொடிகளை வரச்செய்வது, காகிதத்தில் உள்ள மோதிரங்களை சீசாவில் வரச்செய்வது, தொப்பியிலிருந்து முயலை வரச்செய்வது, தட்டில் போட்ட ரூபாய்கள் அதிகமாவது, வெறும் கூடையில் பூக்களை தருவிப்பது, கையிலுள்ள கைகுட்டை டம்ளரிலும், டம்ளரில் உள்ள முட்டை கையிலும் வரச்செய்வது, நினைத்த சீட்டை நினைத்த ஆரஞ்சு பழத்தில் வரச்செய்வது, கையிலுள்ள குருவியுடைய கூடு மாயமாய் மறைந்து விடுவது, மனதிலுள்ளதை அறிவது, மந்திரத்தினால் நால்வர்எழுதிய எண்களை கூட்டச் செய்தல், தொப்பியிலிருந்து நிறை எடைகள் நிறைய எடுப்பது, மந்திரக் கோலை அந்தரத்தில் நிறுத்துவது, தொப்பி, மேஜை, மந்திரக்கோல் இவைகளை கையில்

தொட்டபடியே அந்தரத்தில் நிறுத்துவது, நாற்காலியில் உட்கார்ந்த நங்கை மறைந்து போவது, ஒருவனை சாக்கில் கட்டிப் போட்டு சீல்வைத்த பிறகு கட்டை அவிழ்க்காமல் சாக்கிலிருந்து வெளிவருதல், மனிதனுடைய தலையை அறுத்து ஒரு தட்டில் வைத்து சபையோர்க்கு காண்பித்த பிறகு மறுபடியும் தலையை வைத்து ஆளை உயிர்ப்பிக்கிறது, ஆளை உள்ளே வைத்து பூட்டின பெட்டியிலிருந்து ஆள் க்ஷணநேரத்தில் வெளிவந்து மறுபடியும் க்ஷணநேரத்தில் ஆள் பெட்டிக்குள் கட்டிய பைக்குள் செல்வது ஆகிய இவைகளும் இன்னும் கறுப்புக் கலையைப் பற்றியும் மற்றும் சில வித்தைகளும் இதில் விபரித்து இருக்கின்றன.

வித்தைகளை விபரிக்க படங்களும் அதிகமாக சேர்க்கப்பட்டு இருக்கின்றன.

இதன் விலை ரூபா. 1–52

---

## மற்றும் பலவகை புத்தகங்கள்:—

புதிய அச்சு ! வெளிவந்து விட்டது !!

# உர்தூ ஆஸான்

தமிழ் தெரிந்தவர்கள் ஆசிரியரின்றி 20 நாட்களுக்குள் உர்தூ பாஷையை பேசவும் எழுதவும் படிக்கவும் கற்றுக் கொள்ள ஏதுவான புஸ்தகம் இது ஒன்றே. இன்றே ஒரு உர்தூ ஆஸான் புஸ்தகத்தை வாங்கி இந்தியாவின் முக்கிய பாஷையாகிய உர்துவைக் கற்றுக் கொள்ளுங்கள்.

உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் 256 பக்கங்களில் அச்சிட்டு அழகிய இங்கிலீஷ் கலிகோ பைண்டு செய்யப்பட்டுள்ளது. விலை ரூ. 3–00

# காலி கோரி கிஸ்ஸா

(கறுத்தவள் சிவத்தவள் இருவரின் தர்க்க வரலாறு)

எல்லாம் வல்ல ஆண்டவனின் சிருஷ்டிப் பொருள்களில், மானிட வர்க்கத்திலும் ஏனைய வர்க்கத்திலும் ஜோடி ஜோடியாக யிருப்பதை நாம் காண்கிறோம். ஆணுக்கெதிரில் பெண்ணை படைத்திருப்பதை போன்று, கறுப்புக்கு எதிராக வெள்ளையை உண்டாக்கி யிருக்கிறான். ஆனால் நாயன் எதை எந்த அமைப்பிலும் நிறத்திலும் படைத்திருக்கிறானோ அதில் நாம் அற்ப சொற்ப குறையேனும் கூற முற்படுவோமாகில் அது நம்முடைய அறியாமை, மதியீனத்தையே வெளிப்படுத்துவதாகும். இச்சிறு புத்தகத்திலுள்ள கதை அதற்குச் சான்றாகும். இந்த கதை இரு ஸ்திரீகளைப் பற்றியதாகும். ஆதலால் இதை ஆடவர்கள் பொதுவாயும் ஸ்திரீகள் குறிப்பாகவும் படித்தறிய வேண்டியது அத்தியாவசியமாகும். இதன் விலை ரூ. 0–28

# கைத்தொழில் சம்பாதனை வழிகள்

இந்த புத்தகத்தில் அடங்கியுள்ள விஷயங்களுள் சில:—

ஹேர் ஆயில்கள், ஊதுபத்தி, அச்சாபீஸ் மைகறை எடுத்தல், அச்சாபீஸ்கல் பிளவு பட்டால், அத்தரும் மற்ற வாசனை திரவியங்கள் தயாரித்தல், தைலங்கள் தயாரித்தல், எஸ்ஸன்ஸ்கள் தயாரித்தல், நிறங்கள் தயாரித்தல், டின்க்சர்களும் ஸ்பிரிட்களும் தயாரித்தல், ஆரஞ்சு தோல் எக்ஸ்டிராக்ட், ஆட்டுத் தோல் பதனிடுதல், இரும்பு பாலிஷ், இரும்பும் கல்லும் சேர்க்க சிமென்ட், மைகறைகள் அப்புறப்படுத்தல், இருளில் புலப்படும் எழுத்துக்களுக்குரிய மை, இயந்திர சலுஷன், இங்கிலீஷ் சோப் செய்தல்,

உயர்ந்த வார்னிஷ், உடைந்த கண்ணாடியை ஒட்டும் சிமென்ட், ரோம சங்காரி ரோம சங்காரி சோப், உடைந்த கண்ணாடி மூலம் சம்பாதித்தல், உயர்ந்த கோந்து பசை, போமேட்கள் செய்தல், ஊறுகாய் காள்பட கெடாதிருக்க, எழுதுவதற்கு சாக்பீஸ், எலுமிச்சம் பழம் கெடாதிருக்க, அதன் சாறு கெடாதிருக்க, ஐஸ்கிரீம் செய்தல், மர சாமான்கள் ஒட்டவைக்கும் சிமென்ட், கந்தக குவளை, கடுதாசி உறைகளை ஒட்டும் பசை, கஜூர் கொட்டையினால் பொத்தான்கள் செய்தல், இங்கிகள் செய்தல், கற்பூர கிளாஸ், கனிவர்க்கங்கள் கெடாதிருக்க.

கஸ்தூரி பில்லைகள், கஸ்தூரி எண்ணை, காடி தயாரித்தல், காடியை வெள்ளை நிறமாக்க, காசு கட்டி செய்தல், காஸினி வர்ணம் செய்தல், கிளிஸரின் சோப் செய்தல், கில்ட் வேலை சம்பந்தமானவை, கொசு மூட்டை பூச்சி ஆகியவைகளைக் கொல்ல, சற்கரையில் விளையாட்டு சாமான்கள் செய்தல், சரக்குகளின் சத்து எடுத்தல், சாயத்தொழில், கண்ணாடி மீது சித்திரை வேலை செய்தல், ரோமங்களை கறுப்பாக்குதல், செம்பை வெள்ளி நிறமாக்குதல், செம்பு வெள்ளி பாத்திரங்கள் மீது எழுத்து வரைதல், பாலிஷ்கள் செய்தல், டூத்பேஸ்ட் பவுடர் செய்தல், தங்க முலாம், தயிர் உடனே தயாரித்தல், தியேட்டர் ஆக்டர்களுக்கு முகவஜிகா பவுடர், தேன் தயாரித்தல், தேயிலை பில்லைகள் தோலை பதனிடுதல் சம்பந்தப்பட்டவைகள், ஷர்பத்துகள் தயாரித்தல், சீசா வாய்களை, அடைத்தல், புழு பூச்சிகளை கொல்லும் பவுடர், பென்சில் தயாரித்தல், பெப்பர்மின்ட் தயாரித்தல், போலி சாமான்கள் தயாரித்தல், மெழுகினால் பூ தயாரித்தல், யானை தந்தத்தை வளைத்தல், ரப்பர் ஸீல் தயாரித்தல், தாச்சினாப்பொடி செய்தல், ஸீல் வைக்கும் அரக்கு.

இது 224–பக்கங்களைக் கொண்ட, பெதர்வைட் பேப்பரில் அச்சிட்டு கலிகோ பைண்டு செய்த புஸ்தகம். (அச்சாகிறது) விலை ரூ. 2–60

# தஸ்பீஹ் மணிகள்

எங்களிடம் கீழ்கண்ட பலவித தஸ்பீஹ்கள் ரொக்கத்திற்கு விற்கப் படுவதுடன் வி. பி. பி. மூலமாகவும் அனுப்பப்பட்டு வருகின்றன. தற்போது தயாராயுள்ள தஸ்பீஹ் களின் விபரம்:—

| | | |
|---|---|---|
| மக்கா மதீனு கல் பதித்த தஸ்பீஹ்: | | ரூ. 3–00 |
| ரேடியம் தஸ்பீஹ்: இருட்டில் பிரகாசிப்பது | சிறியது: | ரூ. 3–25 |
| ஷை | கடுத்தரம்: | ரூ. 4–00 |
| மரத்தால் செய்யப்பட்டது: | சிறியது: | ரூ. 0–37 |
| ஷை | கடுத்தரம்: | ரூ. 0–37 |
| நகல் கஹ்ருபா தஸ்பீஹ்: உருண்டையான மணி | சிறியது: | ரூ. 0–50 |
| ஷை | பெரியது: | ரூ. 0–75 |
| நீளமான மணி | சிறியது: | ரூ. 0–87 |
| ஷை | கடுத்தரம்: | ரூ. 1–00 |
| ஷை | பெரியது: | ரூ 1–50 |
| ஷை | ஏக பெரியது: | ரூ 2–50 |
| ஒட்டகப் பல்: தஸ்பீஹ் | சிறியது: | ரூ. 1–50 |
| ஷை | கடுத்தரம்: | ரூ. 2–50 |
| நகல் ஒட்டகப் பல்: உருண்டை மணி | சிறியது: | ரூ. 0–50 |
| | கடுத்தரம்: | ரூ. 0–75 |
| | பெரியது: | ரூ. 0–87 |
| ரோஸ் நிறம் தஸ்பீஹ்: உருண்டை மணி | சிறியது: | ரூ. 0–50 |
| | பெரியது: | ரூ. 0–75 |
| சந்தன மரக்கட்டை தஸ்பீஹ்: | சிறியது: | ரூ. 0–75 |
| ஷை | பெரியது: | ரூ. 1–50 |

# தாவீஸ் ஹமீதிய்யா

## இதில் 8 தாஃவீஸ்கள் அடங்கி யிருக்கின்றன

அவைகள் :—(1) பரக்கத்துண்டாக தாஃவீஸ், (2) குழந்தை பெறுவதற்கு தாஃவீஸ், (3) குழந்தை அழுகாமல் யிருக்க தாஃவீஸ், (4) முஹப்பத்துக்கும் ரிஸ்கு விஸ்திரணத்துக்கும் தாஃவீஸ், (5) பாடமுண்டாவதற்கு தாஃவீஸ், (6) ஜின், ஷைத்தான்களை விட்டு விலக தாஃவீஸ், (7) தொத்து நோய்களுக்கு தாஃவீஸ், (8) சூனியம், பொறாமை, கண்திருஷ்டி முதலியவைகளுக்கு தாஃவீஸ். ஒரே காகிதத்தில் ஷை 8 தாஃவீஸ்களையும் தனித் தனியே பிரிக்கும்படியாக அச்சிட்டு இருக்கிறது.

ஒவ்வொரு தாஃவீஸிலும் அந்தந்த தாஃவீஸை எப்படி உபயோகிப்பது என்னும் விபரங்களும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

8 தாஃவீஸ்கள் சேர்ந்த 1 ஷீட்டுக்கு ரூ. 0–25
ஷை 25 ஷீட்டுகள் ரூ. 3–00

தாஃவீஸ் கஞ்சுல் அர்ஷ் மெல்லிய தாளில் அச்சிடப் பட்டது.
1-க்கு ரூ. 0–06
ஷை 100-க்கு ரூ. 2–00

ஷை தாஃவீஸ் 4 கலர்களில் அச்சிடப் பட்டது. வீடுகளில் பிரேம் போட்டு வைக்க லாயக்கானது.
1-க்கு ரூ. 0–12
100-க்கு ரூ. 4–50

தாஃவீஸ் இஸ்முல் அஃலம் மெல்லிய தாளில் அச்சிடப் பட்டது
1-க்கு ரூ. 0–06
ஷை 100-க்கு ரூ. 2–00

ஷை தாஃவீஸ் 1 கலரில் அச்சிடப் பட்டது வீடுகளில் பிரேம் போட்டு வைக்க லாயக்கானது.
1-க்கு ரூ. 0–12
ஷை 100-க்கு ரூ. 4–50

கல்வத்து ஆண்டவர்களின் தரீகத்து இலாஹிய்யாவின் விர்துகள் பத்தையும் தனியாக போட்டோ அச்சில் செய்யப்பட்டது.
ஷீட் 1-க்கு ரூ. 0–12
100-க்கு ரூ. 8–00

தாஃவீஸ்களை பீங்கான் தட்டுகளில் எழுதும் கருப்பு மை
பொட்டலம் பெரியது 1-க்கு ரூ. 0–20
சிறியது 1-க்கு ரூ. 0–06
சுர்மா நூராணி பொட்டலம் 1-க்கு ரூ. 0–12

குர்ஆன் ஆயத்து படங்கள். மக்கா, மதீனா படம் முதலியவை டஜன்
விலை ரூ. 3–00

# வின்ஸ்டன் சர்ச்சில்

சென்ற மஹா யுத்தத்தில் பிரிட்டன் பிரதமராக யிருந்து, பிரிட்டன் சரித்திரத்திலேயே மிக நெருக்கடியான ஒரு சமயத்தில் தலைமை வகித்து வந்த வின்ஸ்டன் சர்ச்சிலின் சரித்திர சுருக்கம்.
இதன் விலை ரூ. 0–52

# ஜிஹாங்கஷ் தற்புதம்

இது நபி நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் செல்வப் புதல்வி பாத்திமா நாயகி அவர்களின் சந்ததியில் அவதரித்த ஸையிதுனா அஹமதுல் கபீர் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் புதல்வர் ஸையிதுனா ஜலாலுத்தீன் ஹுஸேன் புகாரி அவர்கள் செய்துள்ள யாத்திரையின் போது கண்டுள்ள அற்புதங்களை

